# கசடதபற



ஓவியம் : சிதம்பர கிருஷ்ணன்

டிசம்பர் 1972
ஜனவரி 1973 27, 28 70 காசு

## புதிய புத்தகங்கள்

### வேர்ப்பூக்கள்

(குறுநாவல்கள்)

### சருகில் துளிர்

(சிறுகதைகள்)

என். ஆர். தாசன்

வெளியீடு :

தமிழ்ப்பண்ணை

சென்னை 17

விலை : (ஒவ்வொன்றும்) ரூ 6-00

### நீச்சல் குளம்

(நாவல்)

மகரிஷி

வெளியீடு :

தமிழ்ப் புத்தகாலயம்

சென்னை 5

விலை ; ரூ. 4-00

### சினிமாவுக்குப்போன சித்தாளு

ஜெயகாந்தன்

வெளியீடு :

மீனாட்சி புத்தக நிலையம்

மதுரை 1

விலை : ரூ. 2-75

### உனக்குள் இருப்பவன் நான

(சிறுகதைகள்)

விட்டல்ராவ்

வெளியீடு :

மீனாட்சி புத்தக நிலையம்

மதுரை 1

விலை : 4-50

### புயலில் ஒரு தோணி

(நாவல்)

ப. சிங்காரம்

வெளியீடு :

கலைஞன் பதிப்பகம்

சென்னை 17

விலை : ரூ. 10-00

### அவர்கள் உள்ளே இருக்கிறார்கள்

ஜெயகாந்தன்

வெளியீடு :

மீனாட்சி புத்தக நிலையம்

மதுரை 1

விலை : ரூ. 2-75



# பிணைப்பு

சா. கந்தசாமி

வீணை : சிதம்பர கிருஷ்ணன்

செல்லையா தாழம்பூவின் பெரிய மடல் நுனியை நடுவிரலில் சுற்றிக்கொண்டு தாழம்பூ மெல்ல அசைந்தாடித் தொடையில் இடிக்க இடிக்க வீட்டிற்குச் சென்றான். பெட்டைக்கோழி கேவிக்கொண்டு இவன் மேல் உராய்ந்து கொண்டு பறந்து சென்றது. அதன் மென்மையான வெண் சிறகுகள் உதிர்ந்து காற்றில் பறந்தன. முகத்திற்கு நேரே வந்த சிறகை 'ப்பூ' வென்று ஊதிவிட்டு வீட்டைப் பார்த்தான். சின்ன கருப்புப் பூட்டு இருப்பதே தெரியாமல் தொங்கிக்கொண்டிருந்தது. இவன் நெற்றியில் சுருக்கம் விழ புருவங்களை இடுக்கிக் கொண்டு கதவையே கொஞ்ச நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். சாவி துவாரத்திலிருந்து எண்ணெய் விட்டு விட்டு மெல்லச் சொட்டிக் கொண்டிருந்தது.

'அம்மா எங்க போயிருக்கும்'

பெருவிரலில் தாழையின் மடலை இன்னொரு சுற்று சுற்றிக்கொண்டு வேகமாக 'கீர்' என்று இரண்டு சுற்றுக்கள் சுற்றினான்.

"அம்மா"

உதட்டை நுனிப் பல்லால் கடித்துக் கொண்டு ஒலை இடுக்கில் சாவி இருக்கிறதா

என்று தடவிப் பார்த்தான். விரல்கள் ஓலை இடுக்குகளில் புகுந்து வெறுமனே வந்தன. தாழம்பூவைக் கதவோரத்தில் வைத்துவிட்டுத் தன் பலங்கொண்ட மட்டும் கதவைக் குதி காலால் உதைத்தான். கதவு ஆட, நாதாங்கி குலுங்க மடார், என்ற ஓசையெழுந்து அடங் கியது. வாசலிலிருந்து கேவிக்கொண்டு வந்த பெட்டைக்கோழி கலவரமுற்றது போல் திரும்பி ஓடியது. ஒரு கருப்பு நாய் வேகமாக வந்து இவன் எதிரே நின்றுகொண்டு காலைத் தூக்கி இவன் முட்டியில் வைத்துக்கொண்டு வாலை ஆட்டியது.

இவன் புறங்கையால் நாயை அடித்தான். ''செல்லையாவா?'' அடுத்த கொல்லையிலிருந்து குஞ்சம்மா கேட்டாள். அவள் குரல் தெளி வில்லாமல் கொர கொரப்பான சப்தமாக இருந்தது. அவளுக்குப் பிளந்த உதடு. மூக்குக்கு நேரே உதடுகள் நன்ருகப் பிளந்து இரண்டு பற்கள் பெரிசு பெரிசாக மூக்கிலி ருந்து முளைத்தது மாதிரி துருத்திக் கொண் டிருக்கும்.

இவன் திரும்பிக் கைகளை வேகமாக ஆட்டிக்கொண்டு அவள் பக்கமாகச் சென் ருன். நாய் ஒருவித தயக்கத்துடன் இவன் காலடியைத் தொடர்ந்து சென்றது.

சாணி தட்டிக்கொண்டிருந்தவள் குந்தி யிருந்தபடியே சாணிக் கையோடு இடுப்பி லிருந்து சாவியை எடுத்து நீட்டி, ''அம்மா சந்தைக்குப் போயிருக்கு, எங்க போயிட்ட நீ. சோத்தத் தின்னூட்டு சுருக்கா வரச்சொல் லுன்னுச்சு'' என்ருள்.

செல்லையா சாவியை வாங்கிக் கொள்ளா மல் அவளை நேராகப் பார்த்தபடியே, ''கீழ போடு'' என்ருன். இவன் குரல் பயமுறுத்து வது போல் அவளுக்கு இருந்தது. பிறகு மறுபக்கம் திரும்பி, காலைச் சுற்றிச் சுற்றி வளைய வந்த நாயை, காலை மடக்கி இடுப்புக் குக் கீழே உதைத்தான். வள் என்று கத்திக் கொண்டு பந்து மாதிரிச் சுருண்டு இரண்டடி களுக்கு அப்பால் போய் விழுந்தது.

குஞ்சம்மா அவசரம் அவசரமாக இப் பொழுதுதான் நினைவுக்கு வந்தவள் போலும் பொருந்தொடைக்கு மேல் அள்ளிச் சொறுகி யிருந்த புடவையை இழுத்துவிட்டுக்கொண்டு எழுந்து, ''உனக்கு இப்ப என்னடா வந்து டுச்சு'' என்று கேட்டாள்.

இவன் பதிலொன்றும் சொல்லாமல் நாயையே பார்த்துக் கொண்டிருந்தான். நாய் எழுந்து நின்று கொண்டு இவனையே பார்த்துக் கொண்டிருந்தது.

''சாவியைக் கீழ போடு''

குஞ்சம்மா கொஞ்சம் தயங்கிஞள்.

''கீழ போடேன்''

அவள் இவனைத் தலை சாய்த்து விசித்திர மாகப் பார்த்துக் கொண்டே பாதத்திற்கு அருகில் சாவியைப் போட்டாள். இவன் காலால் சாணிபட்ட சாவியை நன்ருகப் புல்லிதழ்களில் தேய்த்துக் கால் விரல்களில் கிடுக்கி எடுத்துக்கொண்டு இவள் பக்கம் திரும்பாமலே நடந்தான். நாய் இவனுக்கு முன்னுல் ஓடி வந்து வாலை ஆட்டியது. உதடு களைக் குவித்து இவன் பலமாகச் சீட்டியடித் தான். தலையைத் திருப்பி இவனைப் பார்த் துக் கொண்டு நின்றது. இவன் தலையை அசைத்துக்கொண்டு, மெல்ல ஓட ஆரம்பித் தான். நாய் இவனுக்கு முன்னே வீட்டை நோக்கி ஓடியது.

பெட்டையை அணைய துரத்திக்கொண்டு சேவல் கதவுப் பக்கத்தில் வந்தது. இவன், 'ச்சூ' என்று கையைப் பரக்க வீசினுன். சேவல் சப்தமிட்டுக்கொண்டு இவன் தலைக்கு மேலாகப் பறந்து சென்றது. அதைப்பிடிக்க நாய் தாவிப் பாய்ந்தது. அதிலொன்றும் மனம் பதியாதவன்போல, மிகவும் நிதான மாகச்சாவியைப் பூட்டில் மாட்டாமல், அதைப் பற்றி இழுத்தான். கதவு—வர்ணம் ஏதும் பூசாத கதவு—நாதாங்கியோடு குலுங்கி ஆடி யது. பூட்டைக் கதவோடு சேர்த்து ஒரு தட்டு தட்டிஞன். பூட்டை உடைத்தெறிய வேண்டும் போல இவனுக்குத் தோன்றியது. விரல்களை மடக்கிக்கொண்டு கதவில் ஒரு குத்து விட்டான்; அதைத் தொடர்ந்து இன் னெரு குத்து; மறுபடியும் ஒரு குத்து—

இவனுக்குக் கைவலிப்பதுபோல் இருந் தது. கையை நன்ருக உதறிக்கொண்டான். கோழியைத் துரத்திக்கொண்டு போன நாய் இரைக்க இரைக்க இவன் முன்னே வந்து குழைந்தது. சாவியைச் சொருகி வேகமாகத் திருகிஞன். பூட்டு திறந்து கொண்டது. நாதாங்கியை எடுத்துவிட்டு, கதவைக்காலால் உதைத்து திறந்துகொண்டு உள்ளே சென் ருன். கதவோரத்தில் கொஞ்சம் தயங்கித் தங்கி நின்று கொண்டிருந்த நாய் வாலை ஆட்டிக்கொண்டு பின்னுல் அடியெடுத்து வைத்தது. உள்ளே சென்ற இவன், கண் களைத் தாழ்த்திக் கொண்டு புதிதாகப் பார்ப்ப வனைப்போல் ஒவ்வொன்றையும் பார்த்தான்.

அடுப்புக்கு மேலே அலுமினிய பேசின். அதன் ஓரமெல்லாம் கரியேறி இருந்தது. பேசி

னுக்கு மேலே ஒரு தட்டு, தட்டுக்கு ஒரு மூடி. இவன் மூடியை ஒரு விரலால் தள்ளி விட்டான். மூடி தரையில் விழுந்து சப்தமிட்டது. இவன் அதைக் கவனிக்காமலேயே, தட்டைப் பார்த்தான். தட்டில் கருவாடு. சுட்ட கருவாடு. பக்கமெல்லாம் தீயில் கருகிய கருவாடு. தான் வெளியில் போன பிறகு சுட்டு இருக்க வேண்டும் என்று இவனுக்குத் தோன்றியது.

பேசின் சோற்றை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தான். கருவாட்டை எடுத்து முன்னே வைத்துக் கொண்டான். நாய் இவனுக்கு நேர் எதிரே பின்னங் கால்களைத் தரையில் படிய வைத்து உட்கார்ந்து கொண்டு, வளைந்த வால் தரையில் பட ஆட்டிக்கொண்டு நாக்கை நன்ருக வெளியில் நீட்டிக்கொண்டு இருந்தது. இவன் நாயையே பார்த்துக் கொண்டிருந்தான். இம்மாதிரி நீண்ட கூர்மையான பற்கள் தனக்கு இருந்தால் கடித்துக் குதறலாம்—

இவன் பலமாகத் தலை அசைத்துக் கொண்டான்.

"உனக்கும் பசிக்குதா?" குரல் அடைக்க பெரிதாகச் சோற்றை உருட்டி வைத்தான். நாய் திடீரென்று எழுந்து சோற்றை இரண்டு வாயில் விழுங்கியது. இவன் நாயைப் பார்த்துக் கொண்டே, மறுபடியும் சோற்றை உருட்டி வைத்தான். நாயின் பரபரப்பு அடங்கி, நிதானத்திற்கு வந்ததும் இவனும் தின்னத் தொடங்கினுன்.

"சனியன், தினமும் முள்ளு கருவாடு தான்—" வாயிலிருந்த சோற்றைத் துப்பி, ஈரில் குத்திய சன்னமான முள்ளை வெகு கவனமாகப் பிடுங்கித் தரையில் போட்டான். துப்பிய சோற்றை நாய் முகர்ந்து பார்த்து விட்டு மூஞ்சியைப் பின்னுல் இழுத்துக் கொண்டது. பேசினிலிருந்து கொஞ்சம் சோற்றை அறித்து நாய்க்குப் பின்னுல் அப்படியும் இப்படியும் போய்க்கொண்டு இருந்த கோழிக்குப் போட்டான். இவன் கையை உதறியதுதான் தாமதம், வெளியே இருந்து நான்கு பெட்டைக் குஞ்சுகள் படபடவென சிறகை அடித்துக்கொண்டு ஓடி வந்தன. போந்தா சேவல் வளர்ந்து மடிந்து தொங்கும் கொண்டை எழும்பி படியப்படிய ஓட்டமென்றே நடையென்றே தீர்மானிக்க முடியாத விதத்தில் வந்தது.

செல்லையா உதடுகளைப் பன்றி மாதிரி குவித்து நீராகாரத்தைக் குடித்தான. நீராகாரம் குறையக் குறைய பேசினில் கொஞ்சம் சோறும் கொஞ்சம் கல்லும் கிடந்தன. இவன் பேசினைக் கீழே வைத்து, தரையில் கிடந்த கருவாட்டு முட்களை அள்ளிப் போட்டுக் கொண்டு போய் கொல்லையில் கொட்டிவிட்டுக் கை கழுவிக்கொண்டு வந்தான். கோழிகள் முன்னேறி இவன் சாப்பிட்ட இடத்தில் மேய்ந்து கொண்டிருந்தன. அவசரமே இல்லாதவன்போல அவைகளை விரட்டி விட்டு விட்டு வெளியே வந்தான். நாய் இவனுக்கு முன்னே வந்து நின்று கொண்டிருந்தது.

"எலே, உங்கம்மா செத்த சுருக்கா வரச் சொன்னுடா" குஞ்சம்மா சாணியும் கையுமாக வந்து சொன்னுள்.

இவன் அதற்குப் பதிலொன்றும் சொல்லாமல் தலையசைத்தான். இவன் போகிறேன் என்கிருனு இல்லை என்கிருனு—அவளால் அனுமானிக்க இயலவில்லை.

'அவளுந்தான் எம்மாந்தரம் அடிச்சுப் பாத்துட்டா. இது படியவே மாட்டேங்குதே'

போட்டுக்கொண்டிருந்த கால்சட்டையை அவிழ்த்துப் போட்டுவிட்டு, துவைத்துக் கொடியில் கிடந்த கால்சட்டையை எடுத்துப் போட்டுக் கொண்டான். நல்லெண்ணெயைக் கையில் ஊற்றி நன்ருகத் தடவிக் கொண்டான். சீப்பிற்காக அங்குமிங்கும் தேடிப் பார்த்தான். சுவரைப் பார்த்தான், மாடத்தைப் பார்த்தான். பெட்டிமேல் பார்த்தான். அம்மா வைத்த சீப்பை இவனுல் கண்டெடுக்க முடியவில்லை. நான்கு விரல்களை ஒருசேர மடித்துக் குவித்து சீப்புபோல் தலையை உழுதுகொண்டான். கட்டை மயிர் படியாமல் குத்திட்டு நின்றது. கையால் பிடித்துப் பார்த்துக் கொண்டான்; மயிர் கைக்கு அடங்கவில்லை. இவனுக்கு லேசாகச் சிரிப்பு வந்தது. போனவாரம் நீளமாக மயிர் வைத்துக் கொண்டிருந்தான். அம்மாவுக்கு இவன்மேல் கோபம் வந்தால் எட்டித் தலைமயிரைப் பிடித்துக்கொண்டு கன்னத்தில் கிள்ளுவாள்; காதைப் பிடித்துத் திருகுவாள். சுவரோடு தலையை மோதுவாள். இவனுக்கு மயிர்க்காலெல்லாம் வலியெடுத்து உயிர் போவதுபோல் இருக்கும். அப்போதும் இவன் அழமாட்டான். நுனி உதட்டைப் பல்லால் இறுகக் கடித்துக் கொண்டு அவளையே பார்த்துக்கொண்டு இருப்பான். இவன் அழவேண்டும்; அழவைக்கவேண்டும் என்ற வேட்கை அவளுக்கு 'ஒரு துளி அளுவ வருதா—' கோபம் பொங்கச் சுவரில் இவன் தலையை மோதுவாள் தேங்காய் உடைப்பது மாதிரி. இவன் கண்களை இமைக்காமல் அவளையே பார்த்துக் கொண்டிருப்பான். அம்மாவுக்கு முன்னே அழக்கூடாது என்ற வீம்பு இவன் மனசில் ஆழப்பாய்ந்திருந்தது.

அவள் இயலாமையில் சோர்ந்து மூச்சு இரைக்க, "சனியே போய்த் தொலையேன்—"

என்று இவனைத் தரையில் தள்ளி இடுப்பில் உதைப்பாள். இவன், மனத்தில் கோபம் பொங்க செயலற்று அவளையே பார்த்துக் கொண்டு இருப்பான்.

குஞ்சம்மா இருந்தால், ''அடி பாவி, ஏன்டி இதக்கொல்லுற?'' என்று இவனைப் பிடித்து வெளியே இழுத்துக்கொண்டு செல்வாள். அவள் வராவிட்டால் தன் தாய் அடித்துச் சோரும் வரையில் இவன் அப்படியே கிடப்பான்.

போனவாரம் அவள் மயிர் வெட்டிக் கொள்ள இவனுக்குக் காசு கொடுத்ததும் நேராக அம்பட்டனிடம் போய், குட்டையா, ரொம்பக் குட்டையா மயிர் வெட்டச் சொன்னான். அவன் மொட்டை மாதிரி இவன் தலையைக் கரண்டிவிட்டான் இவன் தலையைத் தடவிக்கொண்டு வீட்டில் வந்து நின்றதும், அவள் தன்னையும் அறியாமல் சிரித்து விட்டாள்.

'ரொம்ப சமத்துதான் போ'

மேல் சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு வெளியே வந்தான். தாழம்பூவைக் கையில் சுற்றிக்கொண்டு சாவியை கொடுக்கக் குஞ்சம்மாளிடம் சென்றான்.

''சாவி''

''இங்க சொருவு''

அவள் குந்திய வாக்கிலே கொஞ்சம் இடுப்பை வளைத்துக் காட்டினாள். இவன் முகத்தைச் சுளித்துக்கொண்டு சாவியை அவள் மேல் வீசிப்போட்டு விட்டுத் திரும்பினான்.

''மருமவ பிள்ளைக்கு ரொம்ப வெட்கந் தான்'' இவன் திரும்பிப் பார்த்தான்;

''சந்தைக்குத்தானே—''

பதிலொன்றும் சொல்லாமல் தன்கூட வந்த நாயை, ''ச்சூ'' என்று விரட்டினான். நாய் கொஞ்ச தூரம் பின்னால் நகர்ந்து கொண்டு, தலையைத் தாழ்த்திக்கொண்டு வாலை ஆட்டியது. இவன் குனிந்து ஒரு கல்லையெடுத்தான்.

''சந்தைக்குப் போ. இல்லாட்டா அவ வந்து உன்னதின்னுடுவா''

இவன் நாயை நோக்கி மெதுவாகக் கல்லை வீசினான். கல் தன்னை நோக்கி வருவதைப் பார்த்ததும் நாய் வேகமாக ஓட ஆரம்பித்தது. இவன் கொஞ்ச நேரம் நாய் ஓடுவதையே பார்த்துக் கொண்டிருந்தான். பார்வையிலிருந்து அது மறைந்ததும் தாழம் பூவை எடுத்துக்கொண்டு சாலை வழியே நடக்க ஆரம்பித்தான். இவனுக்கு முன்னே தயிர்க்காரி சென்று கொண்டிருந்தாள். அவள் நடையிலிருந்து அக்கரையிலிருந்து வருகிறவள் என்பதைத் தெரிந்து கொண்டாள். ஆற்றில் இறங்கிதான், தான் பார்க்கையில் எல்லாம் இவள் வருகிறாள் என்பது நினைவிற்கு வந்தது. அம்மா மாதிரி இல்லாமல் நல்லவளாக இருக்கவேண்டும். இல்லாவிட்டால் தினந்தினம் காவேரியைத் தாண்டி வரமுடியுமா...

இவனுக்கு வெகு அருகில் மணியோசை கல கல வென்று மணிகள் குலுங்கி உதிர்வது போலக் கேட்டது. அதைத் தொடர்ந்து கரகரப்பான குரலில் அதட்டுவதுபோல் இவன் ஒதுங்கி, நகர்ந்து கொண்டான். இவனைத் தாண்டிக்கொண்டு வில் வண்டி சென்றது. பச்சை வண்டி; ஜோரான வண்டி. மீசை வைத்துக்கொண்டு சாயத் துண்டில் முண்டாசு கட்டிக்கொண்டு ஒரு கிழவன் வேகமாக வண்டி ஓட்டிக்கொண்டு போனான். பெரிய பெரிய மாடுகள் நடக்காமல் ஓடிக் கொண்டு இருந்தன. இவன் தன்னைக் கடந்து முன்நோக்கிச் செல்லும் வண்டியையே பார்த்துக்கொண்டு நின்றான். வண்டி ஒரே நிதானத்தில் சென்று கொண்டு இருந்தது. இவன் ஓடி ஓடிச் சென்று வண்டியைப் பிடித்துக் கொண்டான்.

வண்டியில் ஒரு பெண்ணும் அவள் தாயாரும் சென்று கொண்டிருந்தார்கள். தங்கள் பேச்சு சுவாரசியத்தில் இவனை அவர்கள் கவனிக்கவில்லை. இவன் எவ்வித நினைப்புமின்றி ஒரே சீராக மணிகள் குலுங்க ஓடும் வண்டியைப் பிடித்துக்கொண்டு ஓடினான். கால்களில் புழுதி படர்ந்துகொண்டே வந்தது.

எதிரே ஒரு பஸ். வண்டியின் வேகம் குறைந்தது; ஓரம் ஒதுங்கியது. பெண்களின் இடைவிடாத பேச்சு கொஞ்சம் நின்றது. வெளிப்புறமாகத் தலையைத் திருப்பிய அம்மா இவனைப் பார்த்து, ''யாருடா அப்பா நீ'' என்று கேட்டாள்.

இவனுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. மேலே உயர்ந்த பார்வை பரிதாபத்தோடு சுற்றுப்புறம் திரும்பியது. இடம் மாறி வந்திருப்பது இவனுக்குத் தெரிந்தது. மரங்களும் செடிகளும் மறைய கட்டிடங்கள் நிறைந்திருந்தன. இவன் கை தயக்கத்துடன் கொஞ்சஞ் கொஞ்சமாக உயர்ந்தது.

பூவைக் கண்டதும் இளம் பெண் முகம் மலர, ''பூக்காரன் அம்மா'' என்றாள். பின்பு முன்பக்கம் திரும்பி, ''கொஞ்சம் வண்டியை நிறுத்துங்க'' என்றாள்.

வண்டி கொஞ்சம் ஓடி, சாலையின் ஓரத்தில் நின்றது.

''இப்படிக் கொடு''

அவன் தாழம்பூவைத் தந்தான்.

அவள் மூக்கோடு வைத்து முகர்ந்து கொண்டே, ''நல்ல வாசனை'' என்றாள்.

''எவ்வளவுடா பையா?''

அவன் மடலைப் பிரித்துக்கொண்டே, ''அவனெ என்னம்மா கேட்கற'' என்றான்.

''ரெண்டணா தரட்டுமாடா பையா''

இவன் பேசாமல் தாயையும் மகளையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''இன்னும் அரையணா சேந்துக்கொடு அம்மா''

''இதுக்கா''

''உம்'' அவள் தலையசைத்தாள்.

''எங்கயாச்சும் திருடியாந்து இருக்கும்-''

அவள் சிரித்துக் கொண்டே, ''போகட்டும் போ, நம்பத் தோட்டம் இல்லையே'' என்றாள்.

''உன் தங்க மனசுக்குக் கடவுள்தான் கண் திறக்கணும்'' என்று சொல்லிக் கொண்டே இவனிடம் காசை எடுத்துக் கொடுத்தாள். புதுக்காசு, பளபள என்றிருந்தது. இவன் கண்களை இமைக்காமல் அதையே பார்த்துக் கொண்டிருந்தான். மனம் திருப்தியிலும் சந்தோஷத்திலும் மூழ்கி இருப்பதுபோல இருந்தது. தலையை ஒரு பக்கமாகச் சாய்த்துக் கொண்டான். ஹாரன் சப்தம். பச்சை பஸ் இவனை ஒட்டிக்கொண்டு சென்றது. இவன் பின்னுக்கு மெல்ல நகர்ந்து கொண்டான். பார்வை சாலையில் படர்ந்தபோது, மாட்டு வண்டி புழுதியில் மறைந்து கொண்டிருப்பது தெரிந்தது.

இவன் காசைப் பையில் போட்டுக் கொண்டு வெறுமையான குறுக்குச் சாலையில் இறங்கினான். இரு பக்கமும் கத்தாழை, குத்துக் குத்தாக. காய்ந்து உலர்ந்த அதன் மடல்கள் மண்ணில் மறைந்து கொண்டிருந்தன. மணலான சாலையில்—அது எங்கு போகிறது என்பது தெரியாமலே நடந்தான்; பயமும் துக்கமுன்றி வேகமாகத் தனக்கு வழி தெரியும் என்ற பாவனையில் நடந்தான். இவனுக்கு எதிரே ஒரு கருத்த பையன் கோவணங்கூட இன்றி மாடொன்றை அதட்டி ஓட்டிக்கொண்டு வந்தான். அவன் கையில் அவனைவிட நீளமான கொம்பு இருந்தது. அவன் இவனை கவனிக்காமலேயே மாட்டை ஓட்டிக்கொண்டு இவனைத் தாண்டிச் சென்றான். இவன் சீட்டி அடித்துக் கொண்டான். நடை துரிதமாகியது. வண்டிச்சோடைகள் அழுத்தமாகத் தெரிந்தன. சாலை வாய்க்காலில் இறங்கியது. ஆழமற்ற வாய்க்கால். முட்டிக்குக் கீழே தெளிந்த தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது. இவன் நடுவாய்க்காலில் நின்று இரண்டு கைகளையும் குவித்துத் தண்ணியை அள்ளிக் குடித்தான். மற்றொரு கை அள்ளி வாயில் நிரப்பிக்கொண்டு கரைக்கு வந்ததும், தண்ணீரைப் பீச்சியடித்தான். வாய்த் தண்ணீர் போனதும் கீழே கிடந்த கறுத்த பானையோட்டை எடுத்துக் கொஞ்சம் பின்னால் நடந்து தண்ணீரில் சில் விட்டான். ஓடு தண்ணீரில் ஒரு தாவுத் தாவி கரைக்குச் சென்று மணலில் விழுந்தது.

'சில்லுவிட ஓடுதான் சரி' என்று சொல்லிக்கொண்டு கையை சுற்றிக்கொண்டு நடந்தான். கொஞ்ச தூரம் போனதுமே ஐந்தாறு வீடுகள் தென்பட்டன. சாலையோரத்தில் இலுப்பை மரத்தின் கீழ் ஒடிசலான கிழவன் பானை செய்துகொண்டு இருந்தான். இவன் நடை தடைப்பட்டது. தயங்கித் தயங்கி அவன் பக்கமாக இவன் சென்றான். சக்கரம் சுழலுவதை உற்றுப் பார்த்துக்கொண்டு நின்றான்.

கிழவன் இடுப்பில் கை வைத்துக் கொண்டு இவன் பக்கமாகத் திரும்பி, ''எங்க போற'' என்று கேட்டான்.

இவன் பதிலொன்றும் சொல்லாமல் தனக்கு முன்னே தெரியும் குறுகலான சாலையில் நிதானமாக நடக்க ஆரம்பித்தான். நடக்க நடக்க சாலை அகண்டும் குறுகியும் நீண்டு கொண்டே இருந்தது. கால்கள் தரையில் லேசாகப் பாவ, கைகளை அசைத்துக் கொண்டு மெல்ல ஓட ஆரம்பித்தான். ஓடிக் களைத்துச் சோரும் சமயத்தில் சிறிய சாலை, இன்னொரு பெரிய சாலையோடு கூடியது. அதில் ஊர்வது போல இரண்டு வண்டிகள் சென்று கொண்டிருந்தன. இவன் அவைகளை இலக்காக வைத்துக்கொண்டு சென்றான். இவன் ஓட ஓட வண்டிகள் இன்னும் இன்னுமென்று பார்வையிலிருந்து அகன்று கொண்டிருந்தன.

செம்மறி ஆடுகள் மந்தையாகச் சாலையைக் கடந்து புழுதியைப் பரப்பிக் கொண்டு சென்றன. இவன் கண்களை சுருக்கிக் கொண்டான். அடிவயிறு வலிப்பதுபோல் இருந்தது. ஒரு கையால் தடவி விட்டுக் கொண்டான். கொஞ்சம் வலி குறைந்து சமநிலைக்கு வருவது போல் இருந்தது. அடியெடுத்து வைக்கையில் மீண்டும் வலியெடுத்தது. தனியாக ஒவ்வொரு அடிக்கும் வலியெடுத்தது. இனி நடக்க முடியாதுபோல் தோன்றியது. சாலையை ஒட்டி எதிரே இருந்த புங்க மரத்தடியில் கால்களை நீட்டிக்கொண்டு உட்கார்ந்தான். மரத்தில் கிளிகள் வந்தமர்ந்தும்,

எழுந்து பறந்து சென்று கொண்டுமிருந்தன. உதிரும் பூவிதழ்களையும் இலைகளையும் பார்த்துக் கொண்டே, வேரில் தலைசாய்த்துக் கொண்டான். இமைகள் குவியத் தொடங்கின.

செல்லையா எழுந்து நின்றபோது பொழுது சாய்ந்து கொண்டிருந்தது. தூங்கிவிட்டது இவனுக்கு ஆச்சரியத்தைத் தந்தது. சோம்பல் முறித்துக்கொண்டு சாலைக்கு வந்தான். ஒரு பார வண்டி இவனைக் கடந்து சென்றது. அதில் ஐந்தாறு பெண்கள் இருந்தார்கள். அவர்கள் பக்கத்தில் பிரப்பங் கூடையில் சாமான்கள். இவனுக்குத் தன் தாயின் நினைவு வந்தது; குஞ்சம்மா சொன்னதும் நினைவுக்கு வந்தது. சட்டைப் பையில் கைவிட்டான். துழாவினான். காசு ஒரு பக்கத்தில் கிடந்தது. தலையை அசைத்துக் கொண்டான். இப்படித்தான் சந்தைக்குப் போக வேண்டும் என்று சொல்லிக்கொண்டே நடக்க ஆரம்பித்தான். இவன் முன்நோக்கிச் செல்லச் செல்ல மனிதர்கள் நிறையத் தென்பட்டார்கள்.

தன் தாயைக் கண்டுபிடித்துவிட வேண்டும் என்ற வேகம் இவனுள் மூண்டது. நடை துரிதமாகி ஓட்டமாக மாறியது. இவன் விரைந்து ஓடுகையில் மேற்கத்திய மாடுகள் பூட்டிய வண்டி நிதானமாகச் சந்தைப் பக்கம் சென்று கொண்டு இருந்தது. இவன் அதைத் தாண்டி பள்ளத்திலும் மேட்டிலும் இறங்கி ஏறி—கிழக்காகத் திரும்பி சந்தைக்குள் நுழைந்தான். ஒரு பார வண்டியை இரண்டு பேர் பிடித்துத் தள்ளிக்கொண்டு இருந்தார்கள். சாயத் துண்டில் முண்டாசு கட்டிக் கொண்டிருந்த கிழவன், மாட்டை அதட்டி ஓட்டிக் கொண்டிருந்தான். கருப்பு மாடு நிதானமாக சாணி போட்டுக்கொண்டு இருந்தது. தொர தொரவென்று சாணி தரையில் விழுந்து நாலா பக்கமும் சிதறியது. சாணி மேலே பட்டுவிட்டதால் ஒரு துலுக்கப் பெண் உருதில் கத்திக்கொண்டே போனாள். இவன், அவள் மேல் உராய்ந்து கொண்டு சந்தைக்குள் புகுந்தான்.

முன் வண்டி நகராததால், பின்னால் புளி வண்டியும், வெல்ல வண்டியும் நின்று கொண்டு இருந்தன. வண்டி இடுக்கில் புகுந்து, மிளகாய்க் கடைகளையும் தானியக் கடைகளையும் தாண்டிக்கொண்டு வேர்க் கடலை விற்கும் பகுதிக்குச் சென்றான். இங்குதான் அம்மா மாலைப்பொழுதில் காணப்படுவாள் என்பது அவனுக்கு நினைவுக்கு வந்தது. உயரமாக சின்ன மீசை வைத்துக் கொண்டு மார்பில் புலிப்பல் கட்டிக்கொண்டு வேர்க் கடலை விற்கிறவன் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு—சிரித்துக்கொண்டு டீ குடித்துக் கொண்டு இருப்பாள். இருட்ட ஆரம்பிக்கிற சமயத்தில் இருவரும் ஒன்றாகப் புறப்பட்டு, இடித்து இடித்துக்கொண்டு ரயில் கேட் வரையில் வருவார்கள், ரயில்கேட் தாண்டியதும்—நடை தடைபட்டு—அவன் தங்கி விடுவான். அவள் திரும்பித் திரும்பி இவனைப் பார்த்துக் கொண்டே நடப்பாள்.

மனத்தில் களிப்பு பொங்க நடை துள்ளலாக மாறும். பிரம்பங் கூடையை கக்கத்தில் இடுக்கிக் கொண்டு முந்தானை காற்றில் அலைபாய செல்லுவாள். அவன் பின்னே வருவான்.

செல்லையா அவனைத் தேடினான். அவசரமே இல்லாதவன் போல பராக்குப் பார்த்துக்கொண்டு அங்குமிங்கும் சென்று பார்த்தான். ஒரு பக்கமாக ஒதுங்கி, வெங்காய மண்டி பக்கத்தில் நின்றுகொண்டு எங்கிருந்தாவது வருகிறானா என்று பார்த்தான். கைகளைப் பின்னுக்குக் கட்டிக்கொண்டு, இரண்டடி முன்னே வந்து நின்றான். மீன்காரி இவனை இடித்துக்கொண்டு போனாள். இவன் சட்டையை உதறிவிட்டுக் கொண்டான். போன மாதம் அம்மா உருளைக் கிழங்கு வியாபாரியோடு குந்திக்கொண்டு இருந்த நினைவுக்கு வந்தது. இவன், மெல்ல ஒவ்வொரு அடியாக எடுத்து வைத்து பரபரப்பு ஏதுமில்லாமல் அந்தப் பக்கமாகச் சென்றான். தங்கக் காப்புக்கார உருளைக் கிழங்குக்காரன், மடியிலிருந்து சுருட்டை எடுத்து வாயில் வைத்துக் கொண்டிருந்தான். இவன் பார்வை அவன் மேலிருந்து இறங்கி சாலையில் படர்ந்தது. ஒரு பார வண்டி மெல்ல போய்க்கொண்டு இருந்தது. சந்தைக் கூலிகள் கூடையை சாய்த்துத் தலையில் வைத்துக் கொண்டு, வெற்றிலையைக் கொதப்பிக் கொண்டு சென்றார்கள். அரை தூக்கத்திலிருந்த மொகைதீன் இவர்களைக் கண்டதும், "டீ" என்று பலமாகக் கத்தினான். ஒருவன் மொகைதீன் பக்கம் திரும்பி வெற்றிலை எச்சலைத் துப்பினான். மொகைதீன் லுங்கியை இழுத்துவிட்டுக் கொண்டு தொடையில் பலமாகத் தட்டிக்கொண்டு, மாதர்சோத் என்று கத்தினான் கருவாட்டு வண்டியை காக்கைகள் வட்டமிட்டுக் கொண்டு வந்தன.

இவனுக்கு அந்தச் சூழலே எரிச்சல் தருவது போல் இருந்தது. தலையைத் திருப்பி, ஒரு ஓரமாக எச்சலைத் துப்பிவிட்டு வேகமாக நடக்க ஆரம்பித்தான். கூட்டத்தில் புகுந்து ஆட்கள் மீது இடித்துக்கொண்டு—வெளியே வந்ததும் புதுக்காற்று மேலே பரவுவது இவனுக்கு இதமாக இருந்தது. சட்டையைத் தூக்கி முகத்தை அழுத்தித் துடைத்துக் கொண்டான். ஏதாவது சாப்பிடவேண்டும் போல இவனுக்குத் தோன்றியது. கொஞ்சம் போல் நடந்து, புளிய மரத்தடியில் இருந்த டீ கடைக்குச் சென்று பெஞ்சில் உட்கார்ந்து கொண்டு, "ஸ்டாங்கா டீ" என்றான்.

டீ மாஸ்டர் நுரை பொங்க டீ அடித்துக் கொண்டு வந்து இவன் முன்னே சடக் கென்று வைத்தான். இவன் டீயைக் கையில் இடிக்காமலேயே, புளிய மரத்தில் பல வர்ணங்களோடு ஒட்டி இருந்த சினிமா போஸ்டரையே பார்த்துக் கொண்டிருந்தான்.

ஒரு பெண்ணின் தோள்மீது, ஒரு ஆண் தன் தாடையை வைத்து நன்ருக அழுத்திக் கொண்டு இருப்பதைப் பார்க்கப் பார்க்க தன் தாயின் நினைவே இவனுக்கு வந்தது. அவசரமாக டீ கிளாஸ்சை அழுத்திப் பிடித்தெடுத்தான். கிளாஸில் டீ சுடுவதுபோல் இருந்தது. கிளாஸைச் சுழட்டிச் சுழட்டி டீயை ஆற்றிக் குடித்துவிட்டுக் காசைக் கொடுத்தான். இங்கிருந்து ஓடிவிடவேண்டும் போல் இவனுக்குத் தோன்றியது. குறுக்காக இறங்கி நடக்க ஆரம்பித்தான்.

மேட்டின் இறக்கத்தில் ஐந்தாறுபேர்கள் கோலி விளையாடிக் கொண்டிருந்தார்கள். இவன், தன்னையறியாமலேயே கைகளைப் பின்னுக்குக் கட்டிக்கொண்டு அங்கே நின்ருன் அவர்கள் விளையாடுவதை, ஒருவித மான ஆச்சரியத்தோடு பார்த்துக் கொண்டிருந்தான்.

ஒரு பெரிய பையன் காலில் கட்டுப் போட்டுக் கொண்டு கொஞ்சம் நொண்டி நொண்டி நடக்கிறவன் கோலியைச் சரியாகப் போட்டு மற்றவர்கள் காசையெல்லாம் அள்ளிக் கொண்டிருந்தான். இவன், அவன் பக்கமாக நகர்ந்து நின்று கொண்டான். இவனுக்கு எதிரே ஒரு கோலி கிடந்தது. நொண்டி கொஞ்சம் பின்ஞல் நகர்ந்து சிவப்புக் கோலிக்கு எதிரே நின்றுகொண்டு கையை நீட்டி, ''இங்க இருந்து யார் போடுரு?'' என்று கேட்டாள்.

மற்றவர்கள் பேசாமல், அவனையே பார்த்துக்கொண்டு இருந்தார்கள். அவன் காலை இழுத்துக்கொண்டு ஓரடி முன்னே வந்து, ''இங்க இருந்து—'' என்ருன்.

செல்லையா பார்வை கோலியில் படர்ந்தது.

''இங்க இருந்து—'' அவன் மேலும் முன்நோக்கிச் சென்ருன்.

செல்லையா, ''நான் போடுறேன்''

''நீயா?'' இவனைப் போலவே இருந்தவன் கேட்டான்.

செல்லையா தலையசைத்து, நொண்டி பக்கம் திரும்பி, ''நான் போடுறனே'' என்று அடக்கமாகக் கேட்டான். அவன் விசித்திரமாக இவனைப் பார்த்துக் கொண்டே, ''காசு இருக்கா'' என்ருன்.

இவன் அவசர அவசரமாகப் பையில் கையைவிட்டு பளபளக்கும் ஓரணுவை எடுத்து அவன் மூஞ்சிக்கு நேராகக் காட்டிஞன்.

அவன் தலையசைத்துக் கொண்டான். காதில் சொருகியிருந்த பித்தளை இரண்டணுவை எடுத்துக் கீழே போட்டான். இவன் காசு மேல் விழுந்து சப்தமிட்டது.

இவன் தன்னிடத்தில் காலையூன்றி நின்று கொண்டு கொஞ்சம்போலத் திரும்பி, ''ஒரு கோலி கொடு'' என்று நொண்டியைக் கேட்டான். ஒரு சின்னப்பையன் பச்சைக் கோலியை நீட்டிஞன். இவன் அதை வாங்கி உள்ளங்கையில் வைத்து நன்ருக தேய்த்துக் கொண்டான். கையை நீட்டி மடக்கிக் கொண்டான். நொண்டி இவன் செய்கைகளைப் பார்த்து. புன்சிரிப்பு சிரித்துவிட்டு உதடுகளைக் குவித்து சீட்டியடித்துக்கொண்டு கைகளை அகல விரித்து, குறுக்காகத் தலையில் வைத்துக் கொண்டான்.

இவன் பார்வை கோலிமீது படிய, கை நீண்டு வெகு நிதானமாக கோலியை உருட்டியது. கோலி சீராக ஓடி பக்கத்தில் நின்றது. இவன் மெல்லக் குனிந்து காசை எடுத்துப் பையில் போட்டுக்கொண்டு அவர்கள் பக்கம் திரும்பிஞன். அவர்கள் எதிர்பாராத தோல்வியால் சங்கடப்படுவதுபோல இவனுக்குத் தோன்றியது. நொண்டி சிரித்து தலையசைத்துக் கொண்டு இவனை கடைக் கண்ணுல் பார்த்துக் கொண்டு இருந்தான். இவன் அவனை நேராகக் குத்திட்டுப் பார்த்தான்.

அவன், இவன் பக்கம் திரும்பாமலே, ''இன்னெரு வாட்டி?'' என்ருன்.

இவன் தலையசைத்தான்.

''எவ்வளவு?''

''ரெண்டணு''

இவன் பையிலிருந்து காசையெடுத்துப் போட்டுவிட்டுக் கோலியை உருட்டிஞன். கோலி உருண்டு சென்று முன்னைவிட நெருக்கமாகப் போய் நின்றது. இவன் அவசரமே இல்லாதவன் போலக் குனிந்து காசையெடுத்துப் பையில் போட்டுக் கொண்டான்.

நொண்டி இவன் பக்கமாகத் திரும்பி ''நல்லா ஆடுறீயே'' என்ருன். பதிலொன்றும் சொல்லாமல், இவன் கொஞ்சம்போல தலையசைத்துக் கொண்டு நின்ருன்.

''இன்னெரு வாட்டி''

''உம்—''

"ரெண்டணா—" நொண்டி காசை கீழே போட்டு விட்டு, "இந்தக் காசும் உனக்குத் தான்" என்றான்.

"என்னமோ நிக்குது" என்று பட்டும் படாமலும் சொல்லிக்கொண்டு பையிலிருந்து காசையள்ளி சில்லறையாகப் பொறுக்கி யெடுத்துக் கீழே போட்டான்.

"பணமா இல்லீயா?"

"இதுவும் பணந்தானே"

நொண்டியின் தலை திடீரென்று உயர்ந் தது. இவனை விசித்திரமாகப் பார்த்துக் கொண்டே, "சரிதான் போடு" என்று எரிச்ச லுடன் சொன்னான்.

"போடுடா" என்றான் ஒரு சின்ன பையன். ஒருவன், "ஊ" என்று கத்திக் கொண்டு இவனைச் சுற்றி நொண்டி அடித் துக் கொண்டு வந்து கீழே வேண்டுமென்றே விழுந்து கல கல வென்று சிரித்தான். இவை யெல்லாம் தனக்குச் சம்மந்தம் இல்லை என்று சொல்வதுபோல் இவன் கோலியைப் பார்த் துக் கொண்டே இருந்தான். இந்த முறை ரொம்பவும் கவனமாகப் போடவேண்டும் என்று மனத்திற்குள்ளே தீர்மானித்துக் கொண்டான். கையைக் கொஞ்சம்போல பின் னுக்கு இழுத்து, நிதானமாகக் கோலியை உருட்டினான். இவன் எண்ணப்படியே கோலி உருண்டு சென்று நான்கு விரல் இடைவெளி யில் நின்றது. இவன் தலையைத் தூக்கி எல் லோரையும் அலட்சியமாகப் பார்த்தான். வெற்றி இவனுக்குக் களிப்பளித்தது. ஆர்ப் பாட்டம் தன்னை ஒன்றும் செய்யாது என்று சொல்வதுபோல், தலையசைத்துவிட்டு, மண் ணோடு காசையள்ளி பையில் போட்டுக் கொண்டான். நொண்டி ரொம்பவும் விசித் தரமாகப் பார்த்துக் கொண்டே இருந்தான். இவன், அவனைக் கவனிக்காதவன் மாதிரி, அப்போதுதான் மரத்தில் வந்து அமர்ந்த காகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு பையன் எகிறி குதித்து ச்சூ வென்று கைகளை வீசினான். அவன் குரலில் காகம் லவாமுற்று, பலமாகக் கத்திக் கொண்டு வகமாகப் பறந்து சென்றது.

"இன்னொரு வாட்டி"

செல்லையா தலையசைத்தான். மனத்தில் உற்சாகம் பொங்கியது. அவனிடம் எவ்வளவு காசு இருக்கிறதோ அவ்வளவையும் அடித் துக் கொண்டு போய்விட வேண்டும் என்ற வேகம் இவனுள் எழுந்தது. பின்னுக்கு நகர்ந்து, கைகளை வீசிக்கொண்டு, அவனை நேராகப் பார்த்து, "எவ்வளவு?" என்று கேட்டான்.

நொண்டி பதிலொன்றும் பேசாமல் இவன் காலுக்குக் கீழே குந்திக்கொண்டு கசங்கிய ஒரு ரூபாய் நோட்டை யெடுத்துப் போட்டான்.

"ரூபாயா?"

"பயமா இருக்கா?"

"எனக்கென்ன பயம்?"

"பின்ன ஆடு"

"சரிதான்—"

ஒரு பையன் ஊதா கோலியை இவனை நோக்கிப் போட்டான். இடது கையால் பற்றி, உள்ளங்கையில் வைத்து உருட்டிப் பார்த்தான். கோலி ஒருபக்கத்தில் சில்லாக உடைந்திருந்தது. இவன் அதையே ஒரு கணம் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு "இது வேணாம்" என்று கீழே வீசி போட்டான்.

"ஏன்?"

"ஒடஞ்சு இருக்கு"

"ஐயாவுக்குப் புதுசுதான் வேணுமாக்கும்"

இவன் பேசாமல் நின்று கொண்டிருந் தான்.

"அப்ப இந்தா" நொண்டி நீல நிறக் கோலியை, மேல் சட்டைப் பையிலிருந்து எடுத்து கீழே போட்டான். இவன் அதை யெடுத்துத் திருப்பித் திருப்பிப் பார்த்தான்.

"பெரிய ஆட்டக்காரந்தான் சுருக்கா போடு"

"ஏன், கோவிச்சுக்கற"

"எல, சும்மா போடுடா"

செல்லையா அவனை நிமிர்ந்து பார்த்தான். கீழ் உதட்டைப் பல்லால் அழுத்திக் கடித்துக் கொண்டான் கோவப்படாமல்.

ஆடவேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டவன் போல முழுக் கவனத்தையும் கோலியின் மீது செலுத்தினான். இவன் உருட் டிய கோலி இடைவெளி ஏதும் இல்லாமல் நன்றாக ஒட்டிக்கொண்டிருந்தது. அவர்கள் ஒருவித பயத்தோடும் வியப்போடும் இவனைப் பார்த்தார்கள். எங்கிருந்தோ வந்த பையன் ஒரு ஆட்டங்கூட விடாமல் காசை அள்ளுவது இவர்களுக்கு ஒருவிதமான அச்சத்தைத் தந்தது. செயலற்றுப் போனவர்கள்போல் திகைத்து, கொஞ்சம் தெளிவுற்று நொண்டி யின் பக்கம் அரை வட்டமாகக் குழுமினார்கள்.

நொண்டி வேகமாக எழுந்துபோய், கோலியை எடுத்து வேற இடத்தில் போட்டு பின்னால் நகர்ந்து கொண்டு, 'இங்க இருந்து' என்று செல்லையாவைப் பார்த்துக் கேட்டான்.

"போடுறன்"

"ஒத்த ரூபா" இரண்டு ரூபாய் நோட்டை எடுத்தான்.

" சில்லறை கொடு "

" அப்பறமா—போட்டுட்டு—"

" கொடுத்துட்டுத்தான் போடேன் "

இவன் பையில் கைவிட்டுக் கொண்டு கொஞ்சம் தயங்கினுன். இப்படியே ஆடிக் கொண்டுபோவது சரி இல்லை என்று தோன்றியது. ஆனுலும், இப்போது முன்னே இருந்து பின்னுல் செல்ல முடியாது. அவர்களாகப் பின் வாங்கும் வரையில் தொடர்ந்து ஆடிக் கொண்டுதான் இருக்க வேண்டும் என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டு காசை அள்ளிக் கையை விரித்துக் கொண்டு எண்ண ஆரம்பித்தான்.

ஒரு பையன் பின்னுல் வந்து புறங்கையில் உதைத்தான். காசு நாலா பக்கமும் சிதறியது. இவன் அதிர்ச்சியிலிருந்து விடுபட்டுத் திரும்புவதற்குள் முதுகில் ஒரு குத்து விழுந்தது. தண்டுவடத்தின் மூலம் வலி கிர்ரென்று கீழே இறங்குவது போல் இருந்தது. தடுமாறிக் கொண்டு விழப் போனவன் தன் சக்தியையெல்லாம் திரட்டிச் சமாளித்துக் கொண்டு, தன்னையே பார்த்துக் கொண்டு நின்ற நொண்டியின் மேல் பாய்ந்து மூக்கில் குத்தினுன். கொஞ்சம்போல சாய்ந்த அவன் உடலை நெளித்து, இவன் இடது கையைப் பற்றிக் கொண்டு முறுக்கினுன். முறுக்கேற இவன் கால்களை மாறி மாறி வைத்து தப்பித்துக்கொண்டே இருந்தான். நொண்டி. சடேரென்று பிடியை விட்டுவிட்டு, குனிந்து இவன் அடிவயிற்றில் தன் நீளமான காலால் உதைத்தான். இவன் உதையைச் சரியாக வாங்கிக் கொண்டு, தன் இடத்திலிருந்து எழும்பி அவன் மேல் பாய்ந்து தலை மயிரைப் பற்றிக் கொண்டு கன்னத்தைக் கடித்தான். நன்ருக இரத்தம் வரும்படியாக, அவன் அலறிக் கொண்டு தரையில் விழும்படியாகக் கடித்தான். அவனை விட்டுவிட்டு நிமிர்ந்தபோது, பின்னுல் ஒருவன் குத்தினுன். முகத்துக்கு எதிரே ஒருவன் கல்லைத் தூக்கிக்கொண்டு வந்தான். இவனுக்குத் தன்னுல் தாக்குப்பிடிக்க முடியாது என்று தோன்றியது. பல்லைக் கடித்துக் கொண்டு அவர்களைப் பிடித்துத்தள்ளிக் கொண்டு ஓட ஆரம்பித்தான். இவன் ஓட ஆரம்பித்ததும் பயம் அகல, தெம்பு வந்தது அவர்களுக்கு. வேகமாக, ரொம்ப வேகமாக, செடிகளையும் மரங்களையும் தாண்டிக் கொண்டு ஓடும் இவனைப் பிடிக்கக் கத்திக் கொண்டும், கற்களை வீசிக்கொண்டும் தொடர்ந்து வந்தார்கள். நிற்காமல், திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு இவன் ஓடினுன். அவர்கள் அரைவட்டம்போல இவனை வளைத்துக் கொண்டு தொடர்ந்து வந்து கொண்டிருந்தார்கள். நொண்டி எல்லோருக்கும் பின்னுல் கால்களை இழுத்துக் கொண்டு கைகளை ஆட்டிக் கொண்டு, "விடாத, பிடி, ஓத" என்று கத்திக் கொண்டு வந்தான்.

இப்படியே தான் ஓடிக் கொண்டிருந்தால் அவர்கள் பிடித்து விடுவார்கள் என்று அவனுக்குத் தோன்றியது. கால்களைத் தரையில் அழுததி, கொஞ்ச தூரம் வேகமாக ஓடி திடீரென்று கீழே குனிந்து கல்லை யெடுத்துக் கொண்டு நின்று, "நில்லுங்கடா" என்று பெருங்குரலில் கத்தினுன். எதிர்பாரத சப்தத்தால் கலவரமுற்று திகைத்து நின்ருர்கள். இவன் கல் பறந்தது. ஒரு பையன் மண்டையைப் பற்றிக் கொண்டு கீழே உட்கார்ந்தான். அவர்களுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை.

நொண்டி, "விடாதீங்க, பிடிங்க—" என்று கத்தினுன். அவர்கள் கற்களையெடுத்து இவனை நோக்கி வீசினுர்கள். இவனும் கற்களை வீசிக்கொண்டு கொஞ்சம் கொஞ்சமாக நகர்ந்தான். இவன் பின்னுக்கு நகர நகர அவர்கள் இவனைப் பிடித்துவிட வேண்டும் என்ற தீர்மானத்தோடு கூட்டமாகத் துரத்தினுர்கள். இவன் தப்பினுல் போதுமென்று சாலையிலிருந்து ஒதுங்கி புதர்களின் பின்னுல் மறைந்து வாய்க்காலினூடே ஓட ஆரம்பித்தான். கால்களில் நத்தையோடுகள் வெட்ட, சேறு மேலெல்லாம் தெரிக்க இவன் ஓடினுன். திரும்பித்திரும்பிப் பார்த்துக் கொண்டே ஓடினுன். அடிவயிறு வலித்து, கால்கள் சோர்ந்தபோது கோரையில் மறைந்து கொண்டு உட்கார்ந்திருந்தான். கண்கள் கரை மீது பதிய, செவி ஒவ்வொரு சப்தத்தையும் வெகு உன்னிப்பாகக் கிரகித்தது.

ஒரு எருமை மாடு கோரையில் புகுந்து சென்றது. முதலில் பயந்த இவன், சிரித்துக் கொண்டே அதன் பின்னுல் மறைந்து கொண்டு தலையை நீட்டிப்பார்த்தான். எதிரிகள் வருவது தெரியவில்லை. ஒருவேளை வழி தவறி அநேகமாகச் சாலைவழியே சென்றிருக்க வேண்டும் என்று நினைத்தபடி கரைக்கு வந்தான். பைக்குள் கை சென்றது. நன்ருகத் துழாவிப் பார்த்தான். ஒரு காசு கூட இல்லை. மேல் சட்டையில் பார்த்தான். மறுபடியும் கால் சட்டையில் பார்த்தான். ஒரு காசு கூடக் கிடைக்கவில்லை.

ஜெயித்த காசு போனதைவிட—தன் காசு போனதைவிட, உதை வாங்கியதுதான் இவனுக்கு வேதனையளித்தது. வந்த அழுகையை நுனிப்பல்லால் கடித்து அடக்கிக் கொண்டு நடக்க ஆரம்பித்தான்.

பொழுது இருட்டிக் கொண்டு வந்தது.

சீக்கிரம் வீட்டிற்குப் போகவேண்டும் என்று நினைப்பு வந்ததுமே, வீட்டிற்குப் போனதும் அம்மா என்ன சொல்லும் என்ற கேள்வியும் இவனுள் பிறந்தது. 'கோவமா இருந்தா அடிக்கும்—இல்லாட்டா—' என்று முணுமுணுத்துக் கொண்டே மேல் சட்டையைக் கழட்டினான். முதுகில் இரண்டு இடத்தில் நீளமாகக் கிழிந்திருந்தது. கிழிசலையே கொஞ்சநேரம் பார்த்துக் கொண்டிருந்தான். இவன மனம் காரணம் தெரியாமல் பரபரத்தது. சட்டையைப் பற்களுக்கிடையில் வைத்துக் கிழித்தான்; நார் நாராகக் கிழித்தான். கிழிந்த சட்டையை அவசரமே இல்லாதவன் போலப் பந்து மாதிரிச் சுருட்டி வாய்க்காலில் வீசியெறிந்தான். மிதந்த சட்டையில் கல்லை எடுத்துப் போட்டு அமிழ வைத்துவிட்டு, துள்ளு நடையில் சீட்டியடித்துக் கொண்டு நடக்க ஆரம்பித்தான். நடக்க நடக்க வழி நீண்டு கொண்டே போவதுபோல இருந்தது.

பாலத்திற்கு இன்னும் நடக்க வேண்டும். அப்புறம்—பின்னால் திரும்பி வீட்டிற்கு வர வேண்டும் என்பது இவனுக்கு நினைவுக்கு வந்தது.

கால் சட்டையைக் கழட்டி சுருட்டி ஒரு கையில் எடுத்துக் கொண்டு வாய்க்காலில் இறங்கினான். நீர் இளஞ்சூடாக இருந்தது. தண்ணீரை கையால் வெட்டினான். மீன்கள் துள்ளிக்குதிப்பது, மங்கும் பொழுதில் நன்றாகத் தெரிந்தது. சிறிது தூரத்தில் தண்ணீர்ப் பாம்பு தலையை அசைத்துக் கொண்டு போனது. இவன் அதை நோக்கித் தண்ணீரைத் தள்ளினான். பாம்பு நீரில் மூழ்கியது. இவன் நிதானமாகக் காலை இழுத்து இழுத்து வைத்துக் கொண்டு சென்றான். இவன் முன் நோக்கிச் செல்லச் செல்ல, தண்ணீர் ஏறிக் கொண்டே வந்தது. கழுத்துக்கு வந்து, அலையாக எழும்பி மூக்கில் மோதியது. கால்களை நீரில் உந்தி எழும்பினான். ஒற்றைக் கையால் தண்ணீரைத் தள்ளி நீச்சல் அடித்துக் கொண்டு கரைக்கு வந்தான். கரையில் கால் சட்டையைப் போட்டுவிட்டு வாய்க்காலில் இறங்கி எழும்பி எழும்பிக் குதித்தான். கைகளால் மாறி மாறித் தண்ணீரை வெட்டினான். அக்கரைக்குக் காலால் நீச்சல் அடித்துக் கொண்டுபோய் இக்கரைக்கு நீருக்குள்ளேயே மூழ்கிக் கொண்டு வந்தான். குளிர ஆரம்பித்ததும் கரையேறி, கால் சட்டையையெடுத்துத் தலை துவட்டிக்கொண்டு, அந்த ஈரத்தோடே சட்டையை மாட்டிக் கொண்டு மேடேறினான்.

மேட்டிலிருந்து பார்க்கையில் தெருவிளக்குகள் எரிவது நன்றாகத் தெரிந்தது. சீக்கிரம் வீட்டிற்குப் போகவேண்டும் என்ற எண்ணமும் இவனுள் எழுந்தது. வேகமாக—அநேகமாக ஓடுவது போல் நடக்க ஆரம்பித்தான். இரண்டு தெருக்கள் தாண்டி, தன் தெருவுக்கு வந்ததும், கோழி பிடித்து அடைக்கவில்லை என்பதும் ஆடு பிடித்துக் கட்டவில்லை என்பதும் நினைவுக்கு வந்தன. நடை கொஞ்சம் துவண்டது. மெல்ல மெல்ல அடியெடுத்து வைத்துக் கொட்டிலை எட்டிப் பார்த்தான். படுத்துக் கிடந்த ஆடு இவனைப் பார்த்ததும் எழுந்து கத்தியது. இவன் கை அமர்த்திவிட்டு வீட்டுப் பக்கம் சென்றான். கதவு கொஞ்சம் போலத் திறந்திருந்தது. இவன் வேகமாகத் தள்ளிப் பெரிசாகத்திறந்துகொண்டு உள்ளே சென்றான். அம்மா குந்தி வைத்து உட்கார்ந்து கொண்டு குடித்துக் கொண்டிருந்தாள். அவள் பக்கத்தில் நெருக்கமாக இவனால் அடையாளம் கண்டு கொள்ள முடியாத ஒருவன் உட்கார்ந்திருந்தான். இவன் வேர்க்கடலைக்காரன் இல்லை—போன வாரம் கண்ட டீ கடைக்காரனும் இல்லை. இவன் யாரோ—எத்தனை நாட்களுக்கு வருவானோ"

"எலே" இவன் அம்மா கூப்பிட்டாள்.

இவன் நின்ற இடத்தில் இருந்தபடியே திரும்பிப் பார்த்தான்.

"இங்க வாடா"

அவள் ஒரு மிடறு குடித்தாள். தாழ்ந்த அவள் கரத்திலிருந்த கிளாஸில் அவன் கொஞ்சம் சாராயம் ஊற்றி நிரப்பினான். அவள் போதுமென்று தலையசைத்தாள்.

இவன் தன் தாயையே பார்த்துக் கொண்டிருந்தான். "சந்தைக்கு வரச் சொன்னா, ஊர் சுத்திப்புட்டு சோத்துக்கா வந்து நிக்கற—" அவள் எழுந்து இவன் கன்னத்தைப் பிடித்துக் கிள்ளினாள். இவன் கால்களை நன்றாக ஊன்றிக் கொண்டு நின்றான்.

"பாரு கொற முழி. ஆடு கிடக்கு, கோழி கிடக்கு. துப்பு இருக்கா. அதுக்குள்ள ஊரு மேயுது" இவன் தலைமயிரைப் பிடித்துச் சுவரோடு மோதினாள்.

அவள் கூட இருந்தவன் எரிச்சல்அடைந்தவன் மாதிரி முகத்தைத் திருப்பிக் கொண்டு, "அட சின்னப் பயல ஏன் கொல்ற—" என்று சொல்லிக் கொண்டு குடிக்க ஆரம்பித்தான்.

"அட, நீ சும்மா கிட"

அவள், இவனை இன்னொரு முறை சுவரோடு மோதப் போனாள். இவன் திமிறிக் கொண்டு, பின் வாங்கினான். பாய்ந்து பிடிக்க வந்தவளை நோக்கிக் கையைத் தூக்கினான். அவள் ஓடி பின்னுக்கு நகர்ந்து கொண்டு, "ஐயோ, என்ன கொல்றானே, ஏண்டா, துப்பு இல்லாம ஊர்சுத்துறன்னு கேட்டதுக்கு, கொல்லவாரானே" என்று கத்திக் கொண்டு தரையில விழுந்து புரண்டாள்.

அவள் கை பட்டு சாராய கிளாஸ் உருண்டது. இவன் அதையெடுத்துத் தன் பலங்கொண்ட மட்டும் தரையில் அடித்தான்.

கிளாஸ் துண்டுகள் நாலா பக்கமும் சிதறின. ●

# இலக்கிய அரசியல்

க. நா. சுப்ரமண்யம்

இலக்கிய அரசியல் (literary politics) என்கிற வார்த்தைச் சேர்க்கை இப்போது அதிகமாக அடிபடுவது என் காதில்விழுகிறது. literary politics என்கிற பதத்தைவிட literary polemics என்பது அதிகமாகப் பொருந்தும். politicsஎன்பது மக்களைப் பாதிக்கிற விஷயம்; polemics என்பது பரஸ்பர கருத்து வேற்றுமைப் பரிமாறல். கருத்து வேற்றுமையைப் பெரிசு பண்ணிக்கொள்கிற காரியம் சற்று அதிகமாக இருக்கிறது. இது நல்ல விஷயம் என்று நினைக்கவே எனக்குத் தோன்றுகிறது.

அதுவும் இலக்கியத்தைப் பற்றிக் கருத்து வேற்றுமைகள் வளருகிற இலக்கியத்துக்குச் சற்று அதிகமாகவே தேவைப்படுகிறது. இலக்கியாசிரியனும் விமர்சகனும்—இருவருக்கும் அதிக வித்தியாசமில்லை, எனினும் பிரித்தே சொல்லுகிறேன் — அதிகமாகக் கருத்து வேற்றுமைகளுக்கு இடம் தர வேண்டியது அவசியம். கட்சி கட்டிக்கொண்டு கிளம்புகிற அளவுக்கு ஒவ்வொருவருக்கும் அபிப்ராயம் இருப்பது மிகவும் நல்லது. அதுவும் இலக்கியம் என்கிற அடிப்படைப் பிரக்ஞை தாண்டாமல் இந்தக் கருத்து வேற்றுமைகளும், கட்சிச் சண்டைகளும் இடம் பெற்றால் அதனால் ஒட்டு மொத்தத்தில் இலக்கியத்துக்கு லாபம் உண்டு.

கோஷ்டிச் சண்டைகளையும், பூசல்களையும், ஏசல்களையும் பற்றி வருத்தப்படுகிற நல்லவர்கள் வருத்தப்படட்டும். இந்த நல்லவர்களால் இலக்கியத்துக்கு லாபம் இல்லை. ஒரு கருத்தைத் தீவிரமாகப் பற்றிக்கொண்டு, அந்தக் கருத்தே சரியானது என்று சண்டைக்கு வருபவர்களால் இலக்கியத்துக்கு நிச்சயமாக லாபம் உண்டு. முதல் லாபம் இந்த மாதிரிக் கருத்து வேற்றுமைக்கு இடம் உண்டு என்று தெரிவது. இரண்டாவது லாபம் இந்தக் கருத்தையும்—அது எவ்வளவுதான் மோசமானது என்றாலும்கூட—ஒருவர் பூரணமாக நம்பிக்கை வைக்கிறார் என்பது. மூன்றாவது லாபம்—இது மிகவும் முக்கியமானது—ஒருவர் ஏற்றுக் கொள்கிற கருத்துகளுக்கப்பாலும் கருத்துக்கள் உண்டு என்று மற்றவருக்குத் தெரிய வருகிறது. நான்காவது, ஐந்தாவது என்று சொல்ல இடம் உண்டு. இப்போது அதுபற்றிக் கணக்கு வேண்டாம்.

ஒரு விமர்சகர் ழீன்ஜெனேதான் இலக்கியத்தின் கொழுந்து என்று எண்ணுகிறார். அதை அவர் அழுத்தமாகச் சொல்வதில்—மற்றவர்களை உதறித் தள்ளிவிட்டுச் சொல்வதில் தவறில்லை. விஷயம் தெளிவாகத் தெரிகிறது—ழீன் ஜெனே மட்டுமல்ல—வேறு பலரும் உண்டு ஃபிரெஞ்சு இலக்கிய மரபிலே என்றும், ழீன் ஜெனேக்கு முன்னோடிகளும் உண்டு என்கிற விஷயம் இலக்கியம் அறிந்தவர்களுக்கெல்லாம் தெரியும். கொள்ளைக்காரனாகவும், கொலைகாரனாகவும், கற்பழிப்பவனாகவும் இருப்பவன் இலக்கியம் எழுதி மனத்தைக் கவருகிற காரியம் இன்னும் பல தலைமுறைகளுக்குத் தமிழில் ஏற்படப் போகிற மாதிரித் தெரியவில்லை. ஃபிரெஞ்சு மொழியில் எழுதியவர்களில் பலர் அந்தத் தகுதிகள் படைத்தவர்கள் — alienate ஆனவர்கள். ஃபிரான்ஸ்வா வில்லானில் ஃபிரெஞ்சு இலக்கியம் தொடங்கி, ஒரு நூற்றாண்டாவதற்கு முன்னரே தொடங்கிவிட்ட காரியம் இது.

நவீன இலக்கியச் சூழ்நிலையில் ழீன் ஜெனே இந்த விமரிசகருக்கு முக்கியமாகப் படுகிறார், நல்லது. அவரைத் தவிர மற்ற இலக்கியாசிரியர்கள் இந்த விமரிசகருக்கு முக்கியமானவராகப் படவில்லை. கொள்ளைக்காரர்களும், கற்பழிப்பவர்களும், நல்ல மனிதர்களாக வேஷம் போட்டுச் சாதாரணமானவர்களாக நடிக்கமுயலும் ஒரு சூழ்நிலை தமிழர்களுடையது — இந்தியர்களுடையது. கொள்ளைக்காரன் கொள்ளையடிப்பதையும், கற்பழிப்பவன் கற்பழிப்பதையும் இலக்கியமாக்கலாம் என்கிற தத்துவத்தை இந்த விமர்சகர் அடித்துச் சொல்கிறார். அதில் தவறேதும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. நல்லவர்களால் நல்ல இலக்கியத்துக்கு அப்பாற்பட்ட ஒரு இலக்கியம்—இப்படி

யும்—இருக்கலாம் என்பது ஏற்றுக் கொள்ளப் படவேண்டிய விஷயம். இந்த விமரிசகரே கொள்ளையடிக்கவும், கற்பழிக்கவும், கொலை செய்யவும் பழகிக் கொண்டாரானால்—அவர் மனப்போக்கு அதுவானால், அத்துடன் அவருக்கு இலக்கியத் திராணியும் இருக்குமானால் அவரால் இந்தமாதிரி இலக்கியம் செய்ய முடியலாம். அதனால் இலக்கியத்துக்கு லாபம் உண்டு. சமுதாயத்துக்கு லாபம் உண்டா இல்லையா என்பது வேறு விஷயம்-கெடுதியில்லை என்று நிச்சயமாகச் சொல்லலாம். ஒரு ஆயிரம் கொலைகாரர்கள், கொள்ளைக்காரர்கள், கற்பழிப்பவர்களால் கெடாத சமுதாயம், அப்படி ஒன்றும் இந்த விஷயத்தை இலக்கியமாக்கத் தெரிந்த ஒரு மனிதனால் கெட்டு விடப் போவதில்லை. கெட்டுப் போனாலும் நஷ்டமில்லை என்றுதான் எனக்குத் தோன்றுகிறது.

ஒவ்வொரு இலக்கியாசிரியனுமே-அவன் திறமான இலக்கியாசிரியன் என்றால்—சமுதாயத்தில் misfitதான்—ஒன்று சேராதவன். சமுதாயத்தில் இருப்பதை மட்டும் சொல்பவன் socialist சர்க்காரால் கௌரவிக்கப்படலாம்—பெயரும் புகழும் பெறலாம். வெற்றி காணலாம். ஆனால் அவனால் இலக்கிய மரபு வளராது—மேலே செல்லாது. சமுதாய மாற்றம் என்கிற சிந்தனையே பெருமளவில் செயல்படத் தொடங்கியுள்ளது சமீபகாலத்தில்தான். மார்க்ஸுக்குப் பின்னர்தான். ஒவ்வொரு சர்க்காரும்—மார்க்ஸுக்குப் பின்னரும்கூட—தங்கள் சமுதாயத்தை லட்சியமாகக் கருதி நிரந்தரமாக்கிக் கொள்ளவே முயன்று வருகின்றனர் என்பதும் வெளிப்படை.

சமுதாய மாற்றம் வேண்டும், ஆனால் இவ்வளவுதான் வேண்டும் என்று தன் சௌகரியத்துக்காக அரசியல்வாதி நிர்ணயித்துக் கொள்கிறான். அரசியல்வாதியோ, அவன் சௌகரியங்களோ நிரந்தரமானவையல்ல என்பது சிந்திக்கிற யாருக்கும் நிதர்சனமாகத் தெரிகிற ஒரு விஷயம். இலக்கியாசிரியனுக்கு எந்தச் சமுதாயமும் பரிபூரணமானதாக, லக்ஷியபூர்த்தியை எட்டுவதாக இராது. ஏனென்றால், மனித சுபாவம், மனோதத்துவம் அப்படி. aberrations—சாதாரணத்துக்கு அப்பாற்பட்டவை—எப்போதும் இருக்கும். இலக்கியாசிரியனே ஒரு aberration ஆக இருக்கிற இடத்தில்தான் மகத்தான இலக்கியம் சாத்தியமாகிறது. ந. முத்துஸ்வாமியின் கதைகளில் மூத்திரவாடை சற்று அதிகமாகவே தெரிகிறது என்று அடிக்கடி என்னிடம் சொல்லி ஒரு புதுமை எழுத்தாளர் தனது புதுமையையும், பரிசுத்தத்தையும் காப்பாற்றிக் கொள்ள முயலுகிறார் என்று காணும் போது எனக்குச் சிரிப்பு வருகிறது. இந்தப் புது எழுத்தாளர் எழுத்தில் விபசாரம் சற்று அதிகம். மூத்திர நாற்றமானால் என்ன, விபசார நாற்றமானால் என்ன, இரண்டையும் சகித்துக் கொள்ளத்தானே சமுதாயம் இருக்கிறது. இந்த இரண்டு நாற்றங்களுக்கும் அப்பால் இலக்கியம் எப்படி அமைந்திருக்கிறது என்று காண்பதுதான் எனது நோக்கமாக நான் எண்ணுகிறேன்.

மார்க்ஸியவாதிகள் எழுதுகிற எழுத்து எதுவும் இலக்கியமாகாது—ஒருவனைக் கம்யூனிஸ்ட் என்று சொல்லிவிட்டால் போதும், அவன் எழுத்தே நன்றாக இல்லை என்று சொல்வது போலாகும் என்றும் ஒரு கருத்து விமர்சகர்களிடையே தலைதூக்கி நிற்கிறது. நான் மார்க்ஸியவாதிகளின் நண்பன் அல்ல என்றாலும், ஓரளவுக்கு அடிப்படையான அளவில் அவர்கள் இலக்கிய விஷயங்களைப் பற்றிச் சிந்தித்து, கருத்துக்களை வெளியிட்டிருக்கிறார்கள் என்பதை நான் காண்கிறேன். இலக்கிய வளத்தில் இது ஒரு அவசியமான பணியாக எனக்குத் தோன்றுகிறது. அவர்கள் செய்திராவிட்டால் இதை இந்தக் கால கட்டத்தில் வேறு யாரும் செய்திருக்கப் போவதில்லை என்றும் எனக்குத் தோன்றுகிறது. மார்க்ஸிய இலக்கியத்தில், என்னைப் பற்றிய வரையில் சித்தாந்தம் முக்கியமில்லை, இலக்கியம் முக்கியம் என்றே நான் சொல்லுவேன்.

இலக்கியவாதியாக எனக்கு ஒரு இலக்கியவாதியின் அரசியல் அனுபவங்கள் முக்கியமில்லை. அவருடைய இலக்கியமான அனுபவங்கள்தான் முக்கியம். இலக்கியத்தில் politics (அரசியல்) முக்கியமல்ல; polemics-கருத்து வேற்றுமைப் பரிமாறல் முக்கியம் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால் நான் சொல்வதை அப்படியே எவரும் ஏற்றுக் கொள்ளவேண்டும் என்றும் நான் எண்ணவில்லை. கருத்து வேற்றுமை என்பதையே அழுத்தமாகச் சொல்வதுடன் அதுவேதான் கருத்தாக இருந்துவிட வேண்டும் என்றும் நான் எண்ணவில்லை.

இன்னொன்றுகூடச் சொல்லவேண்டும்: சினிமா உத்திகள், நாடகமேடை உத்திகள், அரசியல் உத்திகள், சங்கீத உத்திகள் இவையெல்லாமாகச் சேர்ந்து இலக்கியத்தைப் படைத்துவிட முடியாது—பாதிக்கலாம். அலென் ரோப் கிரில்லே பெரிய ஃபிரெஞ்சு நாவலாசிரியர்: அவர் சினிமாவும் எடுக்கிறார். அதனால் தமிழ் நாவலாசிரியர்கள் எல்லோரும்

சினிமாவில் ஈடுபடவேண்டும் என்று யாரும் கட்டாயப்படுத்த இயலாது. சத்யஜித்ரே நல்ல இந்திய சினிமாப் படங்கள் எடுத்துள்ளார் என்பதற்காக அவர் மகத்தான ஒரு வங்க நாவலை—பதேர் பாஞ்சாலி என்பதை—ஆசிரியர் எழுதியபடி தராமல் சினிமாவுக்காக வெட்டிச் சுருக்கித் தந்துள்ளார்—அது இலக்கியச் சேவையல்ல என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும் என்றே எனக்குத் தோன்றுகிறது.

ப்ரெக்ட் என்கிற பெயர் சமீபத்தில் இலக்கியச் சர்ச்சைகளில் அடிக்கடி அடிபடுகிற பெயர். அவர் பெரிய, மகத்தான, வேறு என்ன வேணுமானாலும் சொல்லுங்கள், நாடக மேடையாசிரியர். அதற்காக ஐரோப்பிய இலக்கியத்தில் அவர்தான் சிறந்த நாடகாசிரியர் என்று சொன்னால் ஏற்றுக்கொள்ள எனக்குத் தோன்றவில்லை. நாடகம் ஒரு ஷேக்ஸ்பியரிடம், ஒரு மோலியரிடம், ஒரு இப்ஸனிடம் இலக்கியமான அளவில், இவரிடம் இலக்கியமாகவில்லை என்று சொல்லவே எனக்குத் தோன்றுகிறது. இலக்கியம் எதற்கு, நாடகமேடை போதும் என்று சொல்பவர்களிடம் எனக்குச் சண்டையில்லை. எனக்கு இலக்கியத்தில் குறி என்று மட்டும் சொல்லுகிறேன். ●

---

# ஒரு வேலைக்காக

**ஆர். ராஜகோபாலன்**

திடீரென எழுந்த இனம் புரியாத சந்தோஷத்துடன் இவன் அந்த இளங்காலையில் தன்னைத் தயார் செய்து கொண்டிருந்தான். அதிகாலையாயிருந்ததால் குளிப்பதற்கு வெந்நீர் மிகுந்த சுகமாக இருந்தது. சுத்தமான உடைகளை அணிந்து கொண்டு இவன் கதவைத் திறந்து வெளியே வந்தபோது மிகுந்த ஆச்சரியத்துக்குள்ளானான். எப்போதும் கல கலவென்றிருக்கும் இவனது தெருவில் அப்போது விரல்விட்டு எண்ணக் கூடியவர்களே நடமாடிக் கொண்டிருந்தார்கள். நாலு வீடுகள் தள்ளி, பேப்பர் கட்டுடன் ஒரு சைக்கிள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. ஒரு பால்காரன் நான்கைந்து எருமைமாடுகளை விரட்டிக் கொண்டிருந்தான். இவனுடைய பக்கத்து வீட்டுக்காரன் வாளியிலிருந்து தண்ணீரைத் தெருவில் தெளித்துக்கொண்டிருந்தான். இவன் அவர்களைத் தாண்டி வேகமாக பஸ்ஸ்டாண்டிற்கு வந்தான். பஸ் வரும்வரை அங்கிருந்த கம்பத்தின் மேல் சாய்ந்துகொண்டு கைகள் இரண்டையும் கட்டிக் கொண்டு எதிரே தெரிந்த, மூட்டைகளை வேகமாக அவிழ்த்துக் கொட்டும் கடைக்காரர்களைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

பஸ்ஸில் ஏறி உட்கார்ந்து கொண்டவுடன்தான் தனக்கு வேலை வாங்கித் தருகிறேன் என்று சொல்லியிருந்தவரை மூன்றாம் முறையாக பார்க்கப்போகிறோம் என்பது நினைவுக்கு வந்தது. முதல் தடவை பார்த்தபோது எவ்வளவு நம்பிக்கையூட்டும்படியாக அவர் இருந்தார் என்பதையும் இவன் அப்போது நினைத்துக் கொண்டான். இவன் முதல் தடவை அவரை அவருடைய காரியாலயத்தில் சந்திக்கச் சென்றிருந்தான். இவனுடன் இவனுடைய அப்பாவும் அரைநாள் லீவு எடுத்துக் கொண்டு வந்திருந்தார். இவன் அதற்கு முன் தினத்திலிருந்தே துணிகளுக்கு, சோப்பு போட்டு இஸ்திரி செய்து தயார் செய்து கொண்டிருந்தான். இவனுடைய அப்பாவின் பழைய ஷூவை ரிப்பேர் செய்து பாலிஷ் செய்து வைத்திருந்தான். இவன் அவரைப் பார்க்கப்போனபோது அவர் தன்னுடைய அறையில் யாருடனோ மிகுந்த சத்தம்போட்டு டெலிபோனில் பேசிக் கொண்டிருந்தார். ஆங்கிலத்திலும், தமிழிலும் மாறி மாறிப் பேசிக் கொண்டிருந்தார். கண்ணாடியைக் கழட்டி ஒருகையில் வைத்திருந்தார். ஒரு சாதாரண அரைக்கைச் சட்டையை அவர் அணிந்திருந்ததை இவன் கவனித்தான். கண்சாடை காட்டி இவர்களை உட்காரச் சொல்லி போனை வைத்தவுடன் முகத்தை மிக மகிழ்ச்சியாக வைத்துக் கொண்டு இவனுடன் கைகுலுக்கி மிக இயல்பாக 'ஹலோ' என்று சொன்னார். இவன் இவனுடைய படிப்பைப் பற்றியும் கல்லூரியைப் பற்றியும் சொன்னபோது 'குட்' என்று முதுகில் தட்டினார். இவனுடைய கல்லூரியில் எப்போதோ வேலை செய்த பேராசிரியரைப்பற்றி விசாரித்தார். தனக்கு அப்போது அதிகவேலை இருப்பதால்

மற்றொருமுறை அவசியம் வந்து இவனைப் பார்க்கச் சொன்னார். எப்படியும் காபி சாப்பிட்டுவிட்டுத்தான் போக வேண்டும் என்று வற்புறுத்தி காபி அருந்தச் செய்தார். இவன் வெளியே வரும்போது அவர் இவனைக் கூப்பிட்டு நன்றாகச் சாப்பிட்டு உடம்பை கவனிக்கும்படி சொல்லி மீண்டும் கைகுலுக்கியதையும் இப்போது நினைத்துக் கொண்டான்.

பஸ் இப்போது கடற்கரையை ஒட்டிய சாலையில் போய்க் கொண்டிருந்தது. சூரியன் இன்னும் மிதமான வெட்பத்துடன் அடிவானத்திற்கு கொஞ்சம் மேலேயே வந்திருந்தான். கடலில் அலைகள் பொங்கிப் பொங்கி எழுந்து கொண்டிருந்தன. கடலின் நீல நிறத்தில் லேசாக வெளுப்பேற ஆரம்பித்திருந்தது. ஈரம் கலந்த கடற்காற்று பஸ் சாதாரணத்தைவிட சற்று வேகமாகப் போய்க் கொண்டிருந்ததனால் சில்லென்று முகத்தில் அடித்தது. தலையயிர் கலைந்திருக்க வேண்டும் என்று இவன் கையால் தலைமயிரைப் பின்னுக்குத் தள்ளி விட்டுக் கொண்டான். வகிடு இங்குதான் இருக்க வேண்டும் என்று அனுமானித்து நடுப்பக்கமாக மயிர்களைத் தள்ளி விட்டுக்கொண்டான். கைகுட்டையை எடுத்து லேசாக முகத்தைத் துடைத்து விட்டுக் கொண்டான்.

இரண்டாம் முறையும் அவரைக் காரியாலயத்தில்தான் சந்தித்தான். அவருடன் ஒரு நண்பரும் இருந்தார். அவர் தன்னுடைய நண்பரைப்பற்றி மிக உயர்வாகச் சொல்லிக் கொண்டார். நண்பர் மிகுந்த பலம் பொருந்தியவரென்றும் நிறைய பேர்களைத் தெரிந்து வைத்துள்ளவரென்றும் சொன்னார். அன்று இவன் அங்கே சென்றது இவனது மேலான அதிர்ஷ்டம் என்று சொல்லி இவனை அவருக்கு அறிமுகம் செய்து வைத்துவிட்டுப்பிறகு பார்ப்பதாகச் சொல்லி அவசரமாக வெளியே எழுந்து போனார். இவன் அவருடைய நண்பரிடம் இவனைப்பற்றிய குறிப்புக்களை எழுதிக் கொடுத்துவிட்டுத் திரும்பி வந்தான்.

இப்போது மூன்றும் முறையாக அவரைச் சந்திக்கப போகிறான். இவன் அவருடைய வீட்டிற்குள் சென்றபோது அவர் நன்றாகத் தூங்கிக் கொண்டிருக்க வேண்டும். இவன் நாற்பது நிமிடங்களுக்கும் மேலாக காத்துக் கொண்டிருந்தான். அவர் எழுந்து வந்தபோது உற்சாகமின்றிக் கடுகடுவென்றிருந்தார். இவன் எழுந்து நின்று வணக்கம் தெரிவித்தபோது அதை அங்கீகரிக்காமல் முகம் சுளித்து 'என்னப்பா' என்றார். இவன் மறுபடியும் அவரிடம் இவனைப் பற்றிய விவரங்களை முழுவதுமாகச் சொன்னான். அவர் இப்போதைய நிலைமை எப்படி இவனுக்கு எதிராக மாறி விட்டிருக்கிறது என்பதை விரிவாக பாவத்துடன் சொன்னார். இவன் வேறொரு பாடத்தை எடுத்துப் படித்திருக்க வேண்டும் என்று சொன்னார். கொஞ்சநாட்கள் பொறுமையாக இருக்க வேண்டும் என்றும் சொல்லி தினசரியைக் கையில் எடுத்துக் கொண்டார். அவர் பேசியவற்றிலுள்ள உச்சரிப்புத் தவறுகள் இவனுக்குப் பளீரெனத் தெரிந்தன. நிமிர்ந்து அவரைப் பார்த்தான். தன்னை மீண்டும் சந்திக்க வேண்டிய அவசியம் உடனே இல்லை என்பதைச் சொல்லி தினசரியைப் பிரித்துக் கொண்டார். இவன் மீண்டும் வணக்கம் தெரிவித்துவிட்டு வெளியே வந்தபோது மிகவும் களைப்படைந்திருந்தான். உட்கார்ந்து கொண்டு போகவேண்டும் என்று கொஞ்சதூரம் நடந்துபோய் நிறுத்தத்திலேயே பஸ்ஸில் ஏறிக் கொண்டான். பஸ் அந்த இடத்தைவிட்டுக் கிளம்பு முன்னமேயே நிறைய பேர் ஏறியிருந்தார்கள். மல்லிகை மணமும் ஓடிகோலான் மணமும் வியர்வை நெடியும் மாறி மாறி அங்கு அடித்தன. கூட்டம் அதிகமாக அதிகமாக பஸ்ஸினுள் சத்தம் அதிகமாக ஆரம்பித்தது. உபயோகமில்லாத எல்லா விஷயங்களும் பேசப்பட்டு இவனது காதில் கலந்து ஒலித்தன. பஸ்கிளம்ப ஆரம்பித்தபோது நிலைமை ஒருவாறு மாற ஆரம்பித்தது. பஸ்ஸினுள் தன் கவனத்தைச் செலுத்தாமல் வெளியேபார்க்கஆரம்பித்தான் வெப்பமேறி, காலையில் பார்த்த நீலவானம் வெளுத்திருக்கக் கண்டான். எதிலுமே கண்கள் நிலைக்காமல் சூன்யத்தைப் பார்ப்பது போல் இருந்தான். பஸ் அந்த குறிப்பிட்ட நிறுத்தத்தில் நின்றபோது இவனுக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. இந்த விசேஷமான நிறுத்தத்திற்கு எதிரில் இவனுக்கு மிகவும் பிடித்தமான அந்தப் பருவத்திலேயே மட்டும் மலரும் நீல நிறப் பூக்கள் இருந்தன. இவனுக்கு அந்தப் பூக்கள் இந்நாட்டுக்குரியவையா அல்லது வெளிநாட்டிலிருந்து கொண்டு வரப் பெற்றவையா என்று கூடத் தெரியாது. ஆனால் அங்கிருக்கும் இரண்டு மூன்று மரங்களும் இலைகளை தெரியாதமாதிரி ஐந்தாறு இதழ்களைக் கொண்ட அடர்ந்த நீலநிறப் பூக்களால் மறைக்கப்பட்டு மிகுந்த அழகுடன் இருக்கும். இவன் இதற்காகவே ஒவ்வொரு ஆண்டும் இந்தச் சமயத்தில் இந்த வழியாக வருவதற்குக் காரணங்களை ஏற்படுத்திக் கொள்வான். இப்போது அந்தப் பூக்கள் வெளிறி நிறமிழந்து காணப்பட்டன. நிறையப் பூக்கள் உதிர்ந்து காய்ந்துபோய் கீழே கிடந்தன. இவன் அதைப் பார்த்து உணர்ச்சியற்றுப் போய்க் கண்களை மூடிக் கொண்டான்.

மீண்டும் பஸ்ஸினுள் கூச்சல் அதிகமாவதைத் திடிரென்று உணர்ந்தான். டிக்கட் கொடுப்பதற்காக பஸ்ஸை நிறுத்தியிருந்தார்

கள். இவனுக்குச் சொல்லமுடியாத ஒரு எரிச்சல் ஏற்பட்டது. கண்களை இவன் திறந்தபோது தோள்களில் பைகளை மாட்டிக்கொண்டு கைகளை ஆட்டிக் குதுகலமாகப் பள்ளிக்குச் சென்று கொண்டிருக்கும் சிறு பெண்களைப் பார்த்தான். அவர்கள் நீலநிறத்தில் சீருடை அணிந்திருப்பது இவனது பார்வையில் பளீரென விழுந்தது. அந்தப் பார்வையைத் தாங்க முடியாதவனாய் தலையைத் திருப்பி பஸ்ஸினுள் பார்க்கத் தொடங்கினான். இவனை ஒட்டி வயதான பெரியவர் ஒருவர் கம்பியைப்பிடித்துக்கொண்டு நின்றிருந்தார். அவருக்கு எழுந்து நின்று இடம் கொடுக்க வேண்டும் என்று நினைத்தான். அவர் இவனுக்கு இவனுடைய அப்பாவை நினைவுபடுத்துவதைப்போல் இருந்தது. முன்தினம் இரவு நடந்ததைத் தவிர்க்க முடியாமல் நினைவு கூர்ந்தான். இவன் படுக்கையை நன்றாக விரித்து படுத்துக்கொண்டு கைகள் இரண்டையும் மார்பிற்கு மேல் நன்றாகக் கட்டிக்கொண்டு மேலே பார்த்துக் கொண்டிருந்தபோது அது நடந்தது. இவ அம்மா பக்கத்தில் உட்கார்ந்து கொணடிருந்தாள். கடவுள் இன்னும் கண்திறக்காததைப்பற்றிப் புலம்பினாள். இவ்வளவு கஷ்டப்பட்டு படித்தும் இவனுக்கு வேலை கிடைக்காததைப் பற்றி அப்பாவிடம் முறையிட்டுக் கொண்டாள். அப்பா அப்போது சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு ஏதோ புத்தகம் பார்த்துக் கொண்டிருந்தார். எழுந்து சென்று புகையிலையைத் துப்பிவிட்டு இவனுடைய தலைமாட்டில் வந்து உட்கார்ந்து கொண்டார். இவன் எவ்வளவு பொறுப்பற்றவனாக இருக்கிறான் என்று கடுமையாக விமர்சிக்கத் தொடங்கினார். தன்னுடைய பெற்றோருக்குத் தான் சிறுவயதில் உதவி செய்ததைப் பெருமையாகச் சொல்லிக்கொண்டார். அன்று மாலை வெகுநேரம் வெளியே இவன் சுற்றிவிட்டு வந்ததை தன் வாதத்திற்குத் துணையாகச் சேர்த்துக் கொண்டார். அன்று மாலை இவன் நண்பனுடைய அறையில் சங்கீதம் கேட்கப் போயிருந்தான். அவர்கள் நீண்டநேர இசைத்தட்டுகளைப் போட்டுக்கேட்டுக் கொண்டிருந்தார்கள். இசையைக் கேட்கக் கேட்க இவனுள் ஒருவிதமான ஆனந்தம் உண்டாகத் தொடங்கியது. தொடர்ந்து நேரம் போவதும் தெரியாமல் இவன் மாலை முழுவதும் சங்கீதம் கேட்டுக் கொண்டிருந்தான். சுற்றுப்புறம் மறைய ஆரம்பித்தது. இவனுக்கு அமைதி என்னும் வெட்டவெளியில பறந்து பறந்து மேலே செல்வதைப் போல சுகமான அனுபவம் இவனுக்கு ஏற்பட்டது. தாங்கமுடியாமல் ஓவென்று அழவேண்டும் போல் இருந்தது. கண்களை மூடிக்கொண்டு உதடுகளைக் கடித்துக் கொண்டான். நண்பனின் அறையிலிருந்து வீட்டுக்குப் கிளம்பியபோது எங்கோ நீண்ட தூரப் பிரயாணம் செய்துவிட்டு வந்ததைப் போன்று உணர்ந்தான். தான் பிறவி எடுத்ததின் பயனை அனுபவித்து விட்டாற்போலவும் ஒரு எண்ணம் தோன்றியது. இந்த எண்ணத்துடனே அன்றைய இரவு தூங்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டதைத் திடீரென்று நினைத்துக்கொண்டான். இப்போது இவனது அப்பா இவனை மிகுந்த சத்தத்துடன் குறை கூறிக் கொண்டிருந்தார். வேலை வாங்கித் தருகிறேன் என்று சொல்பவரைப் பார்க்கக்கூட இவன் முயற்சி எடுப்பதில்லை என்று கூறி இவன் வசமாக மாட்டிக் கொண்டதைப்போல இவனைப் பார்த்தார். இவன் எழுந்து உட்கார்ந்து கொண்டு 'நாளை காலை அவரை பார்க்கப்போகிறேன் அதற்கு 5 ரூபாய் கடன் வாங்கத்தான் வெளியே போனேன்', என்று சொன்னான். திடீரென்று ஒருவித அமைதி அங்கே நிறைந்தது. இவனது அம்மா சமாதானமாக இந்தத் தடவை வழிபிறக்கும் என்று சொல்லிவிட்டு எழுந்து உள்ளே போனாள். 'காலையில் மறக்காமல் இரண்டு ரூபாய் கொடுத்துவிட்டுப் போ' என்று சொல்லி இவனது அப்பாவும் எழுந்து கொண்டார்.

பஸ் இப்போது மிக மெதுவாக நகர ஆரம்பித்தது. திடீரென்று இவனுக்கு அந்த நீல நிறச் சீருடைக்காரர்களை எப்படியாவது பார்க்கவேண்டும் என்று ஒருவித உந்தல் ஏற்பட்டது. எழுந்து நின்று பெரியவருக்கு இடத்தைக் கொடுத்தான். கம்பியைப் பிடித்துக்கொண்டு குனிந்து தலையை ஜன்னலுக்கு வெளியே நீட்டி மிகுந்த ஆவலுடன் பார்த்தான். அதற்குள் நீலநிறப் பெண்கள் போய்விட்டிருந்தார்கள். ●

# கூத்தும் நாடகமும்

எம். கே. மணிசாஸ்திரி

பெட்ரோல்ட் பிரெஷ்டின் எபிக் தியேட்டர் கிரேக்க நாடகமேடையின் நகலாக இருபதாம் நூற்றாண்டில் புத்துணர்வு பெற்ற இயக்கம். ஏறிக்ளீஸ், ஸோபகளீஸ் போன்ற கிரேக்க நாடகாசிரியர்களின் தியேட்டரை மீண்டும் புதுப்பித்துத் தன்னுடைய 'காகசஸியன் சாக்சர்க்கிள்' 'த்ரீபென்னி ஒபேரா' நாடகங்களில் அந்தப் பழைய உத்தியைப் புகுத்தினார் பிரெஷ்ட். தம்முடைய 'எபிக்' என்ற பதப்பிரயோகத்திற்கு விளக்கம் தருமுகமாக அவரே இதுபற்றிக் கூறுகிறார்! மேடையில் பிரமாதமான காட்சி ஜோடனைகளைப் பற்றி எனக்கு அக்கறையில்லை. அவைகள் மேடையேற்றப்படும் நாடகத்தில் வரும் சம்பவங்களின் பின்புலனாகத்தான் அமைகின்றன. ஆகவே அவைகளை ஒரு யூக வடிவமாகக் காண்பிப்பதே போதுமானது. மாறாக எடுத்துக்கொண்ட விஷயத்தின் கருப்பொருளை வலுவுள்ள, நாடக அம்சத்துடன் மக்களுக்குக் காண்பிக்கவேண்டும்!

ஆனால் பிரெஷ்ட் எந்த ஓரிடத்திலும் 'சொல்லை'த் தூக்கி எறிய முற்படவில்லை. மாறாக, அவர் நாடகங்களில் வசனம் பாடலாக உரை நடையாகக் கலந்து எழுதப்பட்டுள்ளது. அவருடைய நடையில் ஒரு கவிஞனின் சொல்லாட்சியை, இலாவகமான ஒரு கையாளுதலை, ஆற்றொழுக்குப் போன்ற தங்கு தடையற்ற பெருக்கத்தைக் காண முடிகிறது.

அந்த வகையில் பாடலும், உரை நடையும் கலந்து உருவாகியிருக்கும் தமிழ் நாடகங்களும் உள்ளன. ஆனால் அவைகளில் கருத்துச் செறிவும், நாடக உத்திகளும் நவீன முறைப்படி கையாளப்படவில்லை. பிரெஷ்டின் எபிக் தியேட்டர் முறையைப் பின்பற்றி அமெரிக்க பிராட்வேயில் நாடகங்கள் நடத்தப் பட்டன. இவை வழக்கத்திற்குச் சற்று மாறாக இருக்கவே வியாபார ரீதியிலும் பெரும் வெற்றி பெற்றன. உதாரணமாக, சமீப காலத்தில் வெளிவந்த 'ஸவுண்ட் ஆஃப் மியூஸிக்', 'மை ஃபேர் லேடி' படங்கள் அந்த முறையைப் பின்பற்றித்தான் நாடக மேடையினின்றும் படமாக வெளிவந்தன.

நாடகம் என்பது 'Drama' என்ற சொல்லின் சரியான தமிழாக்கமா அல்லது Theatre என்ற சொல்லுக்கு ஈடான சொல்லா என்பதே இன்னும் முடிவாகாத விஷயம். மேனாட்டு 'டிராமா' என்ற சொலலின் நவீனப் படுத்தப்பட்ட பொருளே அரிஸ்டாடிலின் 'unities of drama' வையே ஒப்புக் கொள்ள மறுப்பதாகும். பெக்கெட், அயனஸ்கோ, பின்டர் போன்ற அப்ஸர்ட் நாடகக் குழுவினரின் டிராமா, தியேட்டர் பற்றிய கருத்து பிரெஷ்டின் எபிக் தியேட்டரையோ, பிரென்டெல்லோவின் illusion-and reality யையோ ஒத்துக் கொள்வதாக இல்லை. இப்ஸனுக்குப்பின் தோன்றிய ரியலிஸம், நேச்சுரலிஸம், எக்ஸ்பிரஷனிஸம் எபிக் எக்ஸ்பிரிமெண்டல், சர்ரியலிஸம், அப்ஸர்ட் தியேட்டர்கள் ஒவ்வொன்றும் நமக்கு வாழ்வைப் பற்றிய நோக்கை ஒவ்வொரு கோணத்தினின்றும் காட்டுகின்றன. ஆனால் அவைகளின் அடிப்படை நோக்கம் மனித வாழ்க்கையைப் பற்றியதே.

ஆனால் மேலே கூறப்பட்ட பிரிவைச் சேர்ந்த எவருமே 'சொல்லை'த் தூக்கியெறிய முற்படவில்லை. சொல் நாடகத்தின் முதுகெலும்பு. கூத்தில் 'pantomime' கலந்திருக்கிறது. பாத்திரங்களின் வசனத்திற்குப் பதிலாகப் பின்னணி இசை உடனிழைந்து வரும். அதற்கேற்ப கலைஞர்கள் முகபாவம் காட்டுவர். அதனின்றும் வளர்ச்சி பெற்றதாய், கற்பனைக்கு நிறைய இடம் அளிப்பதாய், பௌதீக விஷயங்களுக்கு குறியீட்டு உத்தியின் மூலம் விளக்கம் தருவதாக நாடகம் அமைந்தது. கூத்தின் பரிணாம வளர்ச்சியே நாடகம்தான். நாடகத்தினின்றும் கூத்திற்குத் திரும்புவது மனிதன் பின்னோக்கிப் போவது போலத்தான்.

கூத்து பற்றி எழுதிய நண்பர் தம்முடைய ஆதர்ஸமாகக் கொண்டுள்ளதாகத் தெரியும் ப்ரெஷ்ட் கவித்வ நடையுடையவராக நவீன நாடக உலகில் ஏற்றுக் கொள்ளப் பட்டவர். அவருடைய 'ஒபேரா' முறை நாடகங்களைப் படிக்கும்போது நம் நாட்டுக் 'கூத்து' நினைவிற்கு வருவது இயற்கையே. இருப்பினும் அவருடைய பாத்திரங்களும் பேசத்தான் செய்கின்றன.

author, actor, audience என்ற மூன்று 'A'க்களைக் கொண்டதே நாடகம். இதில் இவையனைத்தும் ஒன்றுக்கொன்று இணைந்தே செயல்படவேண்டும். 'audience participation' நாடகத்தில் மட்டும் உண்டு. பார்ப்பவர் நாடகத்தில் ஈடுபாடு கொள்ளாவிட்டால் அது நாடகத்தின் தோல்வி. பார்ப்பவரை நாடகத்தில் ஈடுபாடு கொள்ளச் செய்வது எது? பேசப்படும் வசனமும் (சொல்) செய்து காட்டப்படும் நடிப்பும்தான்.

சம்பவங்களின் சேர்க்கை, (Happenings) கூட நவீனப்படுத்தப்பட்ட நாடக உத்தியாகும். எதுவாயினும் சரி, மேடையில் என்ன நடைபெறுகிறது என்பதைக் காட்ட 'சொல்' ஒரு விளக்கமாகப் பயன்படுகிறது. 'சொல்' தூக்கியெறியப்பட்ட ஒரு நிலையில் 'pantomime'தான் மிஞ்சும்.

சார்லி சாப்ளின் தன் படங்களில் pantomime உத்தியை நன்கு பயன்படுத்தியுள்ளார். காமிராவின் துணையில் இதைச் செய்ய முடியும். மேடையில் செய்தால் இது எடுபடாது.

கூத்து என்பது தனி உத்தி என்பதும் சரியல்ல. கூத்திற்கு, வசனத்திற்குப் பதிலாகப் பாடல் தேவைப்படுகிறது. பாடலற்ற ஒரு கூத்து மேடைமீது காண்பிக்கப்படுமானல் அதன் பொருள் பார்ப்பவர்க்கு அவரவர் மன நிலைக்கு ஏற்பவோ அல்லது புரியாமலோ போகக்கூடும். 'கதகளி'யும் நம் கூத்தின் சாயல் உள்ள நாட்டியமே. அதில் நாட்டிய சாஸ்திரத்தின் பிரயோகங்கள் பெரிதும் புகுத்தப்படுகின்றன. கதகளியை நாடகம் என்று சொல்லிவிட முடியுமா? அல்லது நாடகத்தினின்றும் உச்சநிலை பெற்றது என்று கூறமுடியுமா? கூத்து நாடகத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது 'primitve form'ல் தான் இருக்கிறது.

கூத்தில், நாடகத்தின் உச்ச அம்சங்களான 'audible action' மறுக்கப்படுகிறது. 'visual + audible' என்ற இரண்டும் கலந்த ஒரு பூரணத்வம் அதற்கு இல்லை. "பாரு பாரு பயாஸ்கோப்" என்று பாடிக் குழந்தைகளுக்கு 'மூவி'யைக் காட்டும் தெருச் சினிமாவைப் போல்தான் அது இருக்கமுடியும்.

இ. பா. வின் பாத்திரங்கள் மேடைக்கு நாற்காலிகளைத் தூக்கி வருவது பிரெஷ்டின் உத்தி. 'கலீலியோ' நாடகத்தில் இதை அவர் செய்திருக்கிறார். இதில் 'அன்னியப்படுத்தல்' என்பதை அவர் வலியுறுத்தவே இல்லை. நாடகம் நடிப்போர், பார்ப்போர் மனத்தில் தாம் நடிப்பதும், பார்ப்பதும் நாடகம் என்ற உணர்ச்சியை நாடக ஆரம்பத்திலேயே பெறச் செய்து, அதன் பின்னர் நாடகத்தை நடத்திக் காட்டுகிறார் ப்ரெக்ட். தம்முடைய தத்துவார்த்தக் கருத்துக்களுக்குப் பௌதீக வடிவம் கொடுக்கவே தாம் நாடகம் எழுதியதாக அவரே ஓரிடத்தில் சொல்கிறார். டயலெக்டிகல் மெடீரியலிஸத்தின் கலைப் படைப்புக்களே எனது நாடகங்கள் என்று பிரகடனப்படுத்தும் ப்ரெஷ்ட், நாடகம் பார்ப்பவர்கள் மனத்தில் ஒருமைப்பாடோ, (participation) அன்னியப்படுத்துதலோ இல்லாமல் நாடகத்தை, கலா பூர்வமாகப் பார்க்க அழைக்கிறார். "கலா சிருஷ்டியிலும் மார்க்ஸிய வாதி தன்தத்வார்த்தை வலியுறுத்த கடமைப் பட்டவன்", என்ற லெனினின் சித்தாந்தக் கோட்பாட்டைச் சிரமேற் தாங்கினவர் ப்ரெஷ்ட்.

சி. சு. செல்லப்பாவின் 'முறைப்பெண்' நாடகம் என்னிடம் ஆசிரியராலேயே படித்துக் காண்பிக்கப்பட்டது. என் கருத்தில் அது தட்டையாகவோ, உருண்டையாகவோ இல்லை. அது ஒரு மெலோ டிராமா. அதீத உணர்ச்சிக்கு முதலிடம் கொடுத்து கிராமச் சூழ்நிலையில் எழுதப்பட்ட ஒரு நல்ல நாடகம். அதை ரியலிஸ பாணியில் நடத்தவேண்டும் என்று அவர் என்னிடமும், சக கலைஞர்களிடமும் கூறினர். சிற்சில மாற்றங்களின் மூலம் அதை மெலோடிராமாவினின்று ரியலிஸ டிராமாவாக்க முடியும் என்பது என் கருத்து.

இ. பா. வின் 'மழை' ஒரு பிரச்னைக்குரிய நாடகம். இதிலும் ஆசிரியர் சொல்லைத் தூக்கி ஏறிய முற்பட்டிருந்தால் என்னவாகும்?

செகாவ் சொன்னதுபோல 'சொல்' அளவாகப் பயன்படுத்தப்பட வேண்டும்.

'precision is drama'. நாடகம் என்பதே கணக்கிடப்பட்ட உணர்ச்சி, பேதங்களை, சொல்லாட்சியை, பாத்திரப் படைப்பை உடையதுதான். இவைகளில் ஏதாவது ஒன்று அத்து மீறினலும், குறைந்தாலும் நாடகம் குறைப்பட்டு விடும்.

குறியீடுகளின் (மேடையில்) பிரயோகம் சொல்லின் பிரயோகத்தைத் தவிர்க்க உதவும். எப்போது?

சொல்லினல் உணர்த்துவதைவிட, குறியீட்டின் மூலம் உணர்த்தினல் ஏற்படும் பாதிப்பு வலுவுள்ளதாக அமையுமானல். இதைத்தான் இயக்குனன் செய்கிறான். ஆசி

ரியனின் மனப்படிமத்தில் தோன்றுத வலுவுள்ள தத்துவார்த்த விளைவுகளை, படைப்பினின்றும் தன்னை அன்னியப்படுத்திக் கொள்ளும் இயக்குனனுல் செய்துகாட்ட முடிகிறது. ஆனல் இயக்குனன் என்பவனும் நாடகத்தின் வரையறைக்குள் தான் இதைச் செய்யவேண்டியிருக்கிறது.

தமிழ் நாட்டில், symbol, symbolism என்ற இரண்டு சொல்லேயும் பிரயோகிக்காத நாடகக்காரர்களே இல்லையெனலாம். நாடக மேடையுடன் நெருங்கிய தொடர்புடைய நான் அதை அவர்கள் பயன்படுத்தும் விதத்தைக் கண்டு வேதனையைத்தான் அடைந்து வருகிறேன். குறியீட்டு உத்தியென்பது ஒரு தத்துவார்த்தம். இங்கே அது கொச்சைப் படுத்தப்படுகிறது.

'தியேட்டரைத்தேடுவது' என்பது தத்துவார்த்தமான வார்த்தை. ஒரு நாட்டின் பண்பாட்டு வளர்ச்சியைக் குறிக்கும் அளவுகோலாக மேனுட்டவர் 'தியேட்டரை' மதிக்கின்றனர். அந்த அளவுக்கு நாம் எங்கே போனேம்! 'டிராமா' என்ற சொல்லின் பொருளே பொழுதுபோக்கு என்பதுதான் என்று இலக்கிய மாரீசத்தனம் செய்யும் 'பாபுலர் புள்ளிகள்' பறையறிவிக்கின்றனர். அவர்களுக்குப் பொறுப்பு கிடையாதாம். அவர்கள் சமுதாய சீர்திருத்தவாதிகள் இல்லையாம். நாடகம், கவிதை, நாவல் எழுதுகிறவன் சீர்திருத்தவாதி என்று பலகை மாட்டிக்கொள்ள வேண்டியதில்லை. ஆனல் தான் எழுதுவது கவிதைதானு, நாடகம்தானு என்ற பிரக்ஞை அவனுக்கு வேண்டும். தன் சொல்லாட்சிக்கு, படைப்புக்கு அவன் ஜவாப்தாரி ஆகிருன். அந்த அளவில் நாடகம் இன்று தமிழ் நாடகாசிரியர்களால் சிறப்பிக்கப் பெறவில்லை. முத்துசாமியின் குரலின் ஏக்கம், அறச்சீற்றம் எனக்குப் புரிகிறது. அதற்காக நாடகத்திற்குச் 'சொல்' இரண்டாம் பட்சத் தேவை என்று நான் கூறமாட்டேன். ●

---

# ஆக்டோபஸூம் நீர்ப்பூவும்*

ஆறு கவிஞர்களின் முப்பத்தொன்பது கவிதைகளை (சமர்ப்பணம், தமிழ்த் தாய் வாழ்த்து உட்பட) உயர்ந்ததாளில், வெகு தெளிவாய் அச்சிட்டுத் தொகுப்பாக்கியிருக்கிருர்கள்.

இந்தக் கவிஞர்கள் தாடிக்கார யூதனுக்குத் தாங்களாகவே வாழ்க்கைப்பட்டவர்கள் என்றும், உழைப்பில் வெறுப்பு, வக்ரம், frustration, alienation போன்றவற்றை எழுதுவது புதுக்கவிதையில்லை, இல்லாரும்—இருப்பவரும் என்ற நிலை நீக்கும் உலகை நோக்கி எழுதப்படுவதே புதுக்கவிதை யென்றும் தொகுப்பாசிரியரின் விளக்கவுரை கூறுகிறது.

சிறுகதைக்கும் நாவலுக்குமே இன்னும் சரியாக—தெளிவாக இலக்கணம் சொல்ல முடியாமல் இருக்க, 15 வருட காலத்திய ஒரு கவிதை மரபுக்கு இந்த ரீதியில் இலக்கணம் வகுப்பதை அசட்டுத்தனம் என்று சொல்வதைத் தவிர வேருென்றும் தோன்றவில்லை. எல்லாக் காலத்திலும் கலைகளுக்கு அடிப்படை விஷயங்கள் மாறுபாடற்றவை என்பதும், படைப்பு வடிவங்களில் மட்டுமே மாறுதல்கள் தொடர்ந்து வந்திருக்கின்றன என்பதும் இலக்கியத்தின் பால பாடம். இந்தத் தெளிவுகூட இல்லாமல் சமூகப் பிரச்சினைகள் என்று, கவிதையின் கருவையே ஒரு குறிப்பிட்டச் சட்டத்திற்குள்ளே கொண்டுவர முயற்சிப்பது பண்டிதர்களின் ஒலிக்கூடு பற்றிய கூச்சலுக்கிணையானது என்றே சொல்லவேண்டும்.

இந்தத் தொகுப்பில் உள்ள கவிதைகள் இன்றைய சமூக வாழ்க்கையைப் பிரதிபலிக்கின்றன என்பதில் கிஞ்சித்தும் சந்தேகமில்லை. மனிதத் தன்மையை முற்றிலும் இழந்துவிட்ட இந்த தேசத்து அரசியல் போக்கின்மீது ஏற்பட்ட கோபத்தை இவை காட்டுகின்றன.

---

* ஆக்டோபஸூம் நீர்ப்பூவும்
(கவிதைத் தொகுப்பு)
சிவப்பு ரோஜா பதிப்பக வெளியீடு
ஸ்டார் அச்சகம்
தெற்குக் கடைவீதி
பாளையங்கோட்டை
விலை ரூ. 2-50.

அந்தக் கோபத்தை புலம்பலாகவும், கேலியாகவும் வெளிப்படுத்துகின்றன. ஆனால் ஒட்டு மொத்தமாய்ப் பார்க்கையில் இவை தெளிவற்றக் கோபமாகவும் நயமற்ற கேலியாகவுமே இருக்கின்றன. எந்த உணர்வையுமே வெறும் உவமை சொல்வதில், ஒப்பிட்டுக் காட்டுவதில் கொண்டுவர முடியாது. வார்த்தைகளின் வெளிப்பாடுகளிலும் இவை வரவேண்டும். ஆளும் வர்க்கத்தை ஆக்டோபஸ் என்றும், மனிதஜீவனை நீர்ப்பூவென்றும் கூறுவதால் மட்டும், வாழ்வின் பயங்கரத்தை, அரசியலின் அவலத்தை சொல்லிவிட முடியாது. இந்த உணர்வு, கவிதையின் ஒவ்வொரு சொல்லிலும் தெறிக்கவேண்டும். ஆக்டோபஸ் என்கிற மிகப் பெரிய நீர்வாழ் ஜீவராசியின் அச்சம் கொடுக்கும் நகருதலை, நீர் நடுவே மெல்லியதாய் மௌனமாய், அசைந்திருக்கும் நீலப்பூவின் நுண்மையைக் காண்பிக்க முயற்சிக்காமல், 'அழுகி நாறும் அரசியல் குட்டையில் ஆளும்வர்க்க ஆக்டோபஸ்நெளிகிறது' என்றெழுதுவதில் கவிதை ஜீவனற்றுப் போகிறது. இந்தக் கவிஞர் சொல்ல முற்படும் விஷயத்தின் உணர்வு வாசகனைத் தொட முடியாமல் கீழே விழுகிறது. ஆளும் வர்க்கத்தை ஆக்டோபஸ் என்று அழைப்பதைத் தவிர வேறெதிலும் இந்தக் கவிஞருக்கு அக்கறையில்லையோ என்று நினைக்கத் தோன்றுகிறது. இந்தத் தொகுப்பின் பல கவிதைகள் (பொருட்கள், டாக்டர், சங்கப் பாடல்கள், பழம், நினைவு, ஜனநாயக அரசியல்) இதே ரீதியில் அடிபட்டுப் போகின்றன.

இத்தனைக்கும் நடுவே பளிச்சென்று நெஞ்சில் அமரும் கவிதை 'நட்சத்திரங்களும் பட்டினியும்'.

இந்த
இரவின் நட்சத்திரங்கள்
எங்கே போச்சு?
இந்த
மரத்தின் பூக்களெல்லாம்
ஏன் கருகிற்று?
கண்களுக்கு
இரண்டு நாள் பட்டினியை
ஜீரணிக்க முடியவில்லையோ?

அழுத்தமான சோகத்துடன் வானத்து நட்சத்திரங்களையும், மரத்துப் பூக்களையும் சொல்வதன் மூலம் பசியில் மல்லாந்து கிடக்கும் ஒருவனைப் படம் போட்டுக் காட்டிவிடுகிறது கவிதை. தமிழாசிரியர்கள்— 'பழமை ஓலைகளால் எதிர்கால நினைவுகளில் திரையாவோம், (ஜிப்பாக்கள்) என்று வர்ணிப்பது நல்ல நயம். 'எங்கள் சிறகுகள்' என்ற கவிதை, முழுவதும் குறியீடாகச் சொல்லப்பட்டிருப்பினும், எளிமையாக இருக்கிறது.

வயதாகித் தோல் வெடித்த
மரம் வெட்டப் போனேன்

அருமையான வரி. 'பத்திரிகைத்துவம்' என்ற கவிதை நடைபாதை நையாண்டியை உள்ளடக்கிக் கொண்டிருப்பினும் இதமாக இருக்கிறது.

சோஷலிஸக் கவிதைகள் என்றாலே, ஒரு குறிப்பிட்ட த்வனியில் அடங்கியது என்பதை மீறி, ஆளும் வர்கத்துக்கெதிராக அக்னி வீணை வாசிப்போம் என்றோ அதிகார கோபுரத்தை அடியோடுசாய்ப்போம்என்றோ அதோ வெடிக்கிறது, இதோ வெடிக்கிறது அடிமையென்னும் எரிமலையென்றோ வேஷ்டியை வழித்துக்கொண்டு கூச்சலிடாமல், நாசூக்காய், அமரிக்கையாய் கவிதைகளைச் செய்திருப்பது மிக மிக ஆரோக்யமான விஷயம்.

உண்மையில், ஒரு குறிப்பிட்டக் கொள்கையை பிரசாரமாக்கத்தான் இலக்கியம் என்று கருதுபவர்கள் இந்தக் கவிஞர்களின். த்வனியில், இன்னும் சில கலை நுணுக்க முன்னேற்றங்களோடு, ஈடுபட்டார்களானால், காரியமும் சித்திக்கும், கவிதையும் உயிர்வாழும் என்று தோன்றுகிறது.

கடைசியாக, இந்தத்தொகுப்பில் உள்ள கவிஞர்கள் எல்லோரும் இளைஞர்கள் என்று முன்னுரை சொல்வதால் அந்த உணர்வோடு ஒரு வார்த்தை.

எந்த இறுக்கமும் இல்லாது வாழ்க்கையை ஒட்டு மொத்தமாய்ப் பார்க்க முயற்சியுங்களேன்.

—பாலகுமாரன்

# இன்னும் சிலநாட்கள்*

அசோகமித்திரனின் முதல் தொகுப்பு, வாழ்விலே ஒரு முறை வெளிவந்தபோது அதன் தலைப்பின் பொருத்தத்தைப் பற்றி சிலர் பரிவு கலந்த மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள். அதாவது, தமிழில் தரமான எழுத்தாளர்கள் தங்கள் வாழ்வில் ஒரே ஒரு முறை ஒரே ஒரு புஸ்தகத்தை வெளியிட்டார்களானல் அதையே அவர்கள் பெரிய அதிருஷ்டமாகப் பாவிக்கவேண்டும் என்பது அவர்கள் கருத்து. ஆனல் இந்த இரண்டாம் தொகுப்புக்கு வைதீஸ்வரன் அளித்திருக்கும் முன்னுரையில் கூறியிருப்பதுபோல, அசோகமித்திரன், பரிவும் நல்லெண்ணமும் கலந்த அந்த அபிப்பிராயத்தை இந்தப் புத்தகத்தினல் பொய்ப்பித்திருக்கிருர். புத்தகத் தலைப்பிலிருந்து ஆசிரியர் எண்ணுத அர்த்தங்களைப் பிழியும் முயற்சியில் இன்னும் சிறிது ஈடுபட்டோமானல்: இன்னும் சில நாட்களில் அசோகமித்திரனின் இன்னெரு புத்தகத்தை எதிர்பார்க்கலாம் என்ற முடிவுக்கு வரலாம்.

இத்தகைய முடிவு அசோகமித்திரனின் ரசிகர்களுக்கு அசாதாரணமான மகிழ்ச்சியைக் கொடுக்கும். அசோகமித்திரனின் ரசிகர்கள் என்று ஒரு சாராரைக் குறிப்பிடுவது தவறோ என்று எனக்கு உடனே ஒரு பயம் ஏற்படுகிறது. ஏனெனில். ஒரு சிறு குழாத்திற்கு மட்டும் பிரத்தியேகமாக எழுதுபவர் அசோகமித்திரன் என்ற குற்றச்சாட்டு மறுபடியும் அவர்மேல் சுமத்தப்படலாம். அசோகமித்திரனின் ரசிகர்கள் என்று நான் குறிப்பிடுவது தரமான எழுத்தை ரசிக்கும் எல்லோரையும்தான். இந்த ரசிகர்கள் சுலபமாகச் சந்தோஷப்படமாட்டார்கள். எந்த இலக்கியப் படைப்பையும் நன்ருகயிருக்கிறது என்று உடனே ஒப்புக்கொள்ளமாட்டார்கள். அவசரப் படாமல், நிதானமாகக் கருதிய பின்னர் தான் தங்கள் முடிவுக்கு வருவார்கள். எவர் தரமாக எழுதினலும் அதை மகிழ்ந்து படிப்பவர்கள் இவர்கள். அசோகமித்திரனின் கதைகளில் ஆர்வம் உண்டானவர்களானலும், அசோகமித்திரனை நிந்தித்து எழுதும் எழுத்தாளர்களின் படைப்புகளை கூட,அவை முதல் தரமாக இருக்கும்போது அதே ஆர்வத்துடன் படித்து ரசிப்பவர்கள், ரசிக்கத் தயங்காதவர்கள். இவர்களுக்கு அசோகமித்திரனே அல்லது அருப் சிவராமோ, ஞானக்கூத்தனே அல்லது காமராசனே, யாராயிருந்தாலும், அவர்கள் எழுத்துத்தான் முக்கியம்.

இன்னும் சில நாட்கள் அசோகமித்திரன் வெளியிட்டிருக்கும் மூன்ருவது புத்தகம் முதலிரண்டு புத்தகங்களைப் படித்தவர்களுக்கும், மற்றும் பத்திரிகைகள் வாயிலாக அவர் எழுத்தைப்பற்றி அறிந்து கொண்டவர்களுக்கும் இப்புத்தகத்தில் பொதுவாக என்ன எதிர்பார்க்கலாம் என்று தெரியும். (அவர்கள் எதிர்பார்த்திருக்க முடியாத கலை நுணுக்கங்கள் சிலவும் இப்புத்தகத்தில் இருக்கின்றன.) முதல் முறையாக அசோகமித்திரனைப் படிப்பவர்களுக்கு இந்தக் கதைகள் ஒரு மறக்கமுடியாத கலை அனுபவமாகும்.

அசோகமித்திரனின் கதைகள் எப்படிப் பட்டன என்று சொல்வதைக் காட்டிலும் அவை என்னவாக இல்லை என்று சொல்வது எளிது. அசோகமித்திரனின் கதைகள் நம் வாரப் பத்திரிகைகளுக்கு விருப்பமான படங்கள் போடுவதற்குக் கொஞ்சமும் இடம் கொடுக்காது. இந்தக் கதைகளில் ஒருவிதமான பூவும் கண் சிமிட்டாது. சினிமா நடிகர், நடிகையர்கள் இவர் கதைகள் சிலவற்றில் பாத்திரங்களாக வந்தாலும், வண்ணப் படத் தாள்களில் வரும் அமானுஷ்ய நடிகர்களுக்கும் அவர்களுக்கும் ஒருவித சம்பந்தமும் கிடையாது. இதைத் தவிர 'ஜெட்'

---

*இன்னும் சில நாட்கள்
(குறு நாவல்கள், சிறு கதைகள்)
அசோகமித்திரன்.
விலை: ரூ. 4-00.
வெளியீடு: அசோகமித்திரன்,
4, தாமோதர ரெட்டி தெரு, சென்னை 17.

பிளேன்கள், பாப் மியூஸிக், அரை குறை ஆங்கிலப் பேச்சு, இவையொன்றையும் இவர் கதைகளில் எதிர்பார்க்க முடியாது.

ஆனால் நாம் வாழ்க்கையில் தினந்தோறும் சந்திக்கும் ஆண் பெண்கள்தான் அசோகமித்திரனின் கதாநாயக, நாயகிகள். (வழக்கமான வார்த்தைகள் சமயத்தில் எவ்வளவு அர்த்தமற்றவை என்பதற்கு மேற்கூறிய "கதாநாயக, நாயகிகள்" ஒரு நல்ல உதாரணம். அசோகமித்திரன் எழுத்தில் கதாநாயக, நாயகிகளே கிடையாது. சாதாரண மனிதர்கள்தாம் உண்டு.) பக்கத்து வீட்டில் பி. ஏ. பரிக்ஷை முடிவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் இளைஞன், நமக்குச் சமமான வேலையிலிருப்பவர், ஆனால் தாற்காலிகமாக உயர்ந்த வேலை சில வாரங்களுக்குப் பார்ப்பவர், நம் கிராமத்து வைத்தியரின் சுவீகாரப் பிள்ளை, நமக்கு எல்லோருக்கும் தெரிந்த மூர்க்கமான கணவனிடம் மன்றாடிக் கொண்டிருக்கும் மனைவி, இத்தகையவர்களே அசோகமித்திரனின் கதைகளில் வருபவர்கள். சொல்லப்போனால், நாம் ஒவ்வொருவரும்தான் அசோகமித்திரனின் கதாபாத்திரங்கள்.

இந்தத் தொகுப்பில் 1960 முதல் 1972 வரை எழுதப்பட்ட 12 கதைகள் அடங்கியிருக்கின்றன. ஏற்கெனவே குறிப்பிட்டபடி மிகச் சிறப்பான, ஆனால் சுலபமாக விவரிக்க முடியாத கதைகள் இவை. பலப் பலவிதமான கதைகளுங்கூட. சாதாரணமாக நாம் அசோகமித்திரனிடம் எதிர்பார்க்கும் பதட்டமில்லாத நடை, பரபரப்பில்லாத விவரணை, அழுத்தமான கதைப்போக்கு இவை எல்லாம் இந்தக் கதைகளில் நிரம்பி நிற்கின்றன. வழக்கம்போல், தான் பின்னால் இருந்து கொண்டு, தன்னுடைய அபிப்பிராயங்களைக் கொஞ்சமும் புகுத்தாமல், கதைகளை அதில் வரும் பாத்திரங்களின் பேச்சினாலும் செயலினாலுமே முழுவதும் உருவாக்கியிருக்கிறார். கதைக்குக் கதை கருத்தும், எழுதப்பட்ட முறையும் வேறுபட்டாலும் எல்லாக் கதைகளுக்கும் பொதுவாக ஒரு தனிப்பட்ட இயல்பு இருக்கிறது. இந்த இயல்புதான் அசோகமித்திரனின் எழுத்துக்கு ஒரு தனிச் சிறப்பு. நாம் நம்மைப்பற்றிய உண்மையை விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் ஒத்துக் கொள்ள வேண்டும் என்ற நிலைமையை உண்டாக்குவதே இந்தக் கதைகளின் தனி இயல்பு. அப்படி ஒத்துக்கொண்ட பிறகு நாம் அறிந்து கொண்ட உண்மையை மறக்கப் பார்க்கலாம். ஆனால் அது நம்முடன் நம் வாழ்நாள் முழுதும் இருந்தே தீரும்.

உதாரணமாக, தப்ப முடியாது என்ற கதையை எடுத்துக் கொள்ளலாம். கதையின் தலைவன் இரவில் சிகரெட் பிடிக்க வீட்டை விட்டு வெளியே செல்லுகிறான். (அசோகமித்திரனின் கதைகளில வருபவர்களுக்கு இந்த மாதிரியான கஷ்டங்கள் சகஜமாக ஏற்படும். சிகரெட் பிடிக்கவேண்டும், ஆனால் வீட்டில் பிடிக்க முடியாது.) போன இடத்தில் ஒரு ஆணும் பெண்ணும் (அநேகமாக அவர்கள் கணவனும் மனைவியாகவுமே இருப்பார்கள். இல்லாவிட்டாலும் பாதகமில்லை. ஏனெனில் இது நிஜ வாழ்க்கை) சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள். தன் குழந்தையின் சிகிச்சைக்காகச் சேர்த்து வைத்திருந்த பணத்தை அவன் திருடியிருக்கிறான் என்று அவள் கூறுகிறாள். அவனிடமிருந்து அதைப் பிடுங்கப் பார்க்கிறாள். அடியும், உதையுமே அவளுக்குக் கிடைக்கின்றன. அவளுக்குச் சகாயமாகப் போகவிருந்த இரு சகோதரர்களை அந்த முரடன் மிரட்டித் துரத்திவிடுகிறான். அவளை மீண்டும் நன்றாகப் புடைத்துவிட்டு ஓடி விடுகிறான். அவன் நழுவவிட்ட மூன்று நான்கு நாணயங்களைப் பொறுக்கிக் கொண்டே, அடக்க முடியாமல் அவள் அழுகிறாள். கதையில் செயல் என்று

---

## தென்னை மரங்கள்

இடுப்பின் வரையில் மண்ணையிழுத்துச்
சல்லியை மறைத்தத் தென்னை மரங்கள்
பம்மித் தொங்கும் காய்களை மறந்தன

○

ஏரிக் கரையின் தென்னையின் நிழல்கள்
வெய்யில் ஏறவும் நீரில் குதித்தன.

○

தென்னை உச்சியில் பச்சை மட்டை
ராட்க்ஷஸ மூக்காய் விடைத்துக் கிடக்கும்
முந்தின மட்டை விட்ட இடத்தில்
வெள்ளைப் பள்ளம் வாயாய்ச் சிரிக்கும்
சுற்றிலும் மூக்குகள் வெள்ளை வாய்கள்
தென்னை வந்தது இலங்கையிலிருந்தா?

○

தென்னம் பாளையில் அடங்கிக் கிடந்த
பூக்கள் ஒருநாள் சீறி வெடிக்க
சத்திய புருஷன் பரம்பரையென்று
அணில்கள் ஓடுது சமரசம் செய்ய.

○

வட்டச் செயலர் பரிசாய்க் கொடுத்த
ஈரிழைத் துண்டு கழுத்தில் தொங்க
கோணல் வடிவாய் அலட்சியத்தோடு
மேடையில் நிற்கும் கட்சித் தலையாய்
தென்னை மரங்கள், பன்னாடைகள்.

பாலகுமாரன்

சொல்லப்படும் முறையில் இவ்வளவுதான் நடக்கிறது. இதெல்லாம் நடக்கும்போது நம் கதாநாயகன் (ஹா!) என்ன செய்து கொண்டிருந்தான்? இருட்டில் நின்று கொண்டு புகை பிடித்துக்கொண்டு நடப்பதைச் சும்மா பார்த்துக் கொண்டிருந்தான். சிகரெட் தீர்ந்ததும் வீட்டுக்குத் திரும்புகிறான். சாப்பிடுகிறான். படுத்துக் கொள்ளுகிறான். அசோகமித்திரனின் கதையில் வரா விட்டால் சீக்கிரம் குறட்டை விட்டுத் தூங்குவான். ஆனால் அசோகமித்திரன் இயங்க வைத்த உயிருள்ள ஜன்மமானதால் அவனால் உறங்க முடியவில்லை. நடந்ததையெல்லாம் மறுபடியும் மனக் கண்ணினால் பார்க்கிறான். தன்னுடைய நடத்தைபற்றித் திரும்பத் திரும்ப யோசிக்கிறான். அவளுடைய உதவிக்குத் தான் போகாதது தப்பிதம். போகாததற்குக் காரணம் தான் கோழையாயிருப்பதுதான் என்ற தப்ப முடியாத முடிவுக்கு வருகிறான். தூங்குகிறான். "மறுநாள் விடிந்து நான் எழுந்தபோது எல்லாம் சரியாகிப் போயிருந்தது'' என்ற வாக்கியத்துடன் கதையை முடிக்கிறார் அசோகமித்திரன். ஆனால் ஒன்றுமே சரியாகப் போகவில்லை என்று நமக்குத் தெரியும்; அசோகமித்திரனுக்கும் தெரியும். அந்த மனிதன் தான் கோழை என்று தனக்குள் ஒப்புக்கொண்டது அவன் வாழ்வை நாளுள்ளளவும் பாதிக்கும்.

இம்மாதிரியே இத்தொகுப்பிலுள்ள ஒவ்வொரு கதையும் வாழ்க்கையின் அவலமான உண்மைகளைச் சிறிதும் குறைக்காமல, கூட்டாமல் உள்ளது உள்ளபடியே எடுத்துக் காட்டுகின்றன. அவனுக்கு மிகப் பிடித்தமான நக்ஷத்திரம் என்ற கதையில் பக்கத்து வீட்டுக்காரரின் சாதாரணமான, தெரியாமல் செய்த தப்பிதத்திற்காகப் பழிவாங்கும் தோரணையில் கதையில வரும் இளைஞன் செய்யும் காரியம் மிகப் பரிதாபமும் பயங்கரமும் கலந்த முடிவை உண்டாக்குகிறது. அந்த இளைஞன் தான் செய்த விஷமத்தையும் அதன் விளைவையும், விஷமத்துக்கு உட்பட்டவர்கள் மறந்தாலும் அவன் ஒரு நாளும் மறக்க மாட்டான், அவனால் மறக்க முடியாது.

அசோகமித்திரனின் கதைகளில் வருபவர்கள் எல்லோருமே கோழைகள் தான். ஆனால் அவர்களுள் பலர் வாழ்க்கையினால் கோழையாக்கப்பட்டவர்கள். மனிதனின் உயர்ந்த குணங்கள் என்று கருதப்படுகிறவை அவர்களிடம் இன்னும் இருக்கின்றன. வரவேற்பறையில் என்ற கதை இதற்கு உதாரணம். தன்னால் ஒரு நிலையான உதவியும் மற்றொருவர்க்குச் செய்யமுடியாது என்று அறிந்திருந்தபோதிலும், மற்றவர்களுக்கு ஒரு வினாடியோ, ஒரு நிமிடமோ ஆதரவு அளிக்க விரும்பி, தன் சாதாரண பயத்தையும் மறந்து, தனக்கு இயற்கையாக வரும் வாத்ஸல்யத்தால் இயங்க வைக்கப்பட்ட ஒருவனின் கதை இது.

இத்தொகுப்பிலுள்ள ஒவ்வொரு கதைக்கும் ஒரு சிறப்பு இருக்கிறது. எனக்கு மிகவும் ஆர்வம் அளித்த மற்றொரு தன்மை, கதைகளின் தலைப்புப் பொருத்தம். இதைப் பற்றிச் சொல்லுவதற்கு முன்னால் அசோகமித்திரனின் நடையைப் பற்றிய இன்னொரு விசேஷத்தை முதலில் கூறவேண்டும். அசோகமித்திரனின் எழுத்தில் நகைச்சுவை உண்டு, ஏளனம் கிடையாது. கோபம் உண்டு, ஆனால் கண்டனம் கிடையாது. அவர் கதைத் தலைப்புகளைப் பற்றிப் பேசினோமானால் இதை நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். ஒரு கதையின் தலைப்பு விழா. இக்கதையில் வருபவர்கள் எல்லோருமே வாழ்வினால் அழிக்கப்பட வேண்டும் என்பதற்காகவே தனியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு வைத்திருப்பவர்கள். கதை சர்வதேசத் திரைப்பட விழா ஒன்றைப் பற்றியது. ஆனால் விழா என்ற தலைப்பு கொண்டாடுவதற்கு ஒன்றுமில்லை என்ற கருத்தை துக்கம் கலந்த மங்கலான அரைச் சிரிப்புடன் தெரிவிக்கிறது. எனக்கு மிகவும் பிடித்த விமோசனம் என்ற கதையின் தலைப்பின் பொருத்தத்தைப் பற்றி வாசகர்களே யோசிக்கவேண்டும். புரட்சிகரமான தலைப்பு இது. காத்திருத்தல் என்ற மிக நுட்பமான கதையின் தலைப்பும், முடிவும் கு. பா. ராஜகோபாலனின் விடியுமா? என்ற கதையை நினைவுக்குக் கொண்டு வருகின்றன. இரண்டு கதைகளும் கொஞ்சம்கூட சம்பந்தமில்லாதவை. ஆனால் அவை பொதுச் சூழ்நிலையிலும், கிளர்ச்சி தருகிற கதைப் போக்கிலும், தவிர்க்க முடியாத முடிவிலும் சொந்தம் காணுகின்றன.

நான் எழுதிக்கொண்டே போகலாம். அசோகமித்திரனின் இரு தொகுப்புக்களுக்கும் கவிஞர்கள் முன்னுரை அளித்திருக்கும் பொருத்தத்தைப் பற்றிப் பேசலாம். (ஏனென்றால் அசோகமித்திரன் வாழ்க்கையின் முழுமையை உரைநடையில் காட்டும் ஒரு கவிஞர்.) ஆனால் இதுவரை படித்துவிட்டு, இனியும் அசோகமித்திரனின் கதைகளை உடனடியாகப் படிக்கவேண்டும் என்ற ஆவல் ஒருவருக்கு வராவிடில் நான் இதற்குமேல் எழுதிப் பிரயோசனம் இல்லை.

—எஸ். கிருஷ்ணன்



ஓவியம் : வி. ஜெயராமன்

## அதற்கு முன்னல்

உன்னைப்
பிரியும்போது தொடர்ந்துவந்து
தெருமுனையில் திரும்பிவிடும்.
திரும்பிவந்து முன்னங்
கால்களில் தலைசாய்க்கும்
அதுபோல நீ பழக்கிவிட்டாய்
அவற்றை.

நாளையே
மரணம் ஒரு கருப்பு வண்டியில்
வந்துவிடும்.
அதற்கு முன்னல்
இப்போதே அவற்றின்
சின்னக் குவளைகளில்
பாலை ஊற்றிவிடு.

—பதி

முதல் இதழைப் பார்த்ீர்களா?

## "இன்று"

'இன்று'வை அறிமுகப்படுத்திக் கொள்ளா தவர்களே, ஒருமுறை சந்திப்போமே.
'இன்று'வின் இரண்டாவது இதழிலிருந்து நம் இலக்கியப் பழக்கம் தொடங்க அல்லது தொடர
இதுதான் வாசல்

D/109 9வது குறுக்குச் சாலை
தில்லை நகர்
திருச்சிராப்பள்ளி 18

## தெருக்கூத்து

(pamphlet)

18 ஹோட்டல் பிருந்தாவன்

என். ஆர். காலனி

பெங்களூர் 19

இதழ் வேண்டுவோர் 25 பைசா தபால் தலையுடன் எழுதுக.

## தொடுவானம்

மாத இதழ்

வி. தேவராசன் எம். ஏ.

18 ஹோட்டல் பிருந்தாவன்

என். ஆர். காலனி

பெங்களூர் 19

# விரைவில் வெளிவருகின்றன

## அன்று வேறு கிழமை

ஞானக்கூத்தனின்

கவிதைத் தொகுப்பு

விலை: ரூ. 5-00 (தபால் செலவு தவிர)

முன்பணம் அனுப்புவோருக்கு

விலை: ரூ. 4-25 (தாபால்செலவு உட்பட)

கா. கிருஷ்ணமூர்த்தி

1 தேவடித் தெரு

சென்னை 4

'புள்ளி'யைத் தொடர்ந்தொரு

## வெள்ளம்

கலாப்ரியாவின் கவிதைகள்
'மினி' கவிதைத் தொகுப்பு

ஜனவரியில்

வெளியீடு:

S. கல்யாணசுந்தரம்
'அன்பகம்'
21B, சடலை மாடன் தெரு
திருநெல்வேலி 6

## தண்ணீர்
(நாவல்)

அசோகமித்திரன்

வெளியீடு

கிறிஸ்தவ இலக்கியச் சங்கம்

சென்னை 3





புள்ளி

## புள்ளி

ஒரு சின்னக்
கவிதைத் தொகுப்பு
16 கவிஞர்கள்
4 ஓவியர்கள்
38 கவிதைகள்
விலை: 30 காசு
இது ஒரு இலக்கியச் சங்க
வெளியீடு
தபாலில் பிரதி
வேண்டுவோர்
55 காசு தபால் தலையுடன்
எழுதவும்.
நா. கிருஷ்ணமூர்த்தி
1 தேவடித் தெரு
சென்னை 4





Published by N Mahaaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K Swamy at Prem Press. 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Devadi Street, Madras-4.